அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஶ்ரீ ஜக³த்³கு³ரு க்³ரந்த²மாலா

# ॥ श्रीसुब्रह्मण्यभुजङ्गम् ॥

# ஶ்ரீ ஸுப்³ரஹ்மண்ய பு⁴ஜங்க³ம்

ஶ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஶ்ரீரங்கம்.
1962



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

## பதிப்புரை

ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சாரதா பீடாதிபதிகளின் அனுக்ரஹத்தினால் அமைக்கப்பட்ட அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் முக்கிய நோக்கம் ஸ்ரீ பகவத்பாதாளின் க்ரந்தங்களை அநுவாதத்துடன் பிரசுரித்து குறைந்த விலையில் எல்லோருக்கும் கிடைக்கும்படி செய்து ஆசார்யாளுடைய உபதேசங்களை எங்கும் பரவச்செய்வதே. இந்நோக்கத்துடன் பிரசுரிக்கப்படும் **"ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா"** வின் **'ஸ்ரீ ஸுப்³ரஹ்மண்ய பு⁴ஜங்க³ம்'** இது.

அத்வைத ஸித்தாந்தத்தை யாவரும் புரிந்து ஸ்வானுபவம் பெற பாஷ்யங்களையும் பிரகரணங்களையும் இயற்றிய பகவத் பாதர்கள் அந்நிலையை அடையமுடியாதவர்களும் கிரமமாக சிரேயஸ்ஸை அடைய எல்லா தேவதா மூர்த்திகள் பேரிலும் ஸ்தோத்ரிங்களை அருளியிருக்கிறார்கள். எல்லா தேவதா மூர்த்திகளும் ஒரே பரப்ரஹ்மத்தின் உருவம் என்பது தான் ஸித்தாந்தம். எந்த தேவதையை வழிபட்டாலும் அவர் அநுக்ரஹத்தால் முடிவில் அடையும் ஸ்தானம் முக்தி என்ற பரமானந்த நிலையே. அவரவர் ருசிக்குத் தக்கபடி அந்தந்த தேவதையை வழிபட்டு அருளைப்பெற இந்த ஸ்தோத்திரங்கள் மிகவும் உபயோகமாக இருக்கும். பாராயணம் செய்வதற்கு ஏற்ற முறையில் லலிதமான பதங்களுடன் அமைந்துள்ள இந்த ஸ்தோத்திரங்களில் அந்தந்த தேவதைகளின் விசேஷ மஹிமைகளும் பல உயரிய கருத்துக்களும் நன்கு காட்டப்பட்டிருக்கின்றன. முக்கியமாக ஒவ்வொரு மூர்த்தியையும் நிர்விசேஷ பரப்ரஹ்மமாக வர்ணித்து பிரகரணங்களில் கூறப்பட்ட வேதாந்த தத்துவங்களும் ஆங்காங்கு காட்டப்படுகின்றன.

இவை தமிழ் அநுவாதத்துடனும் விரிவுடையுடனும் யாவருக்கும் உபயோகப்படும் வகையில் ஸமிதியால் வெளியிடப்பட்டிருக்கிறது.

இந்த ஸ்தோத்திரங்களில் பொதிந்துள்ள கருத்துக்களைத் தெரிந்து பக்தியுடன் பாராயணம் செய்வதால் ஸ்ரீ ஆசார்ய அநுக்ரஹத்துடன் எல்லா அபீஷ்டங்களையும் பெறலாம்.

**K.V. சுப்பரத்னம்**,
பொதுக் காரியதரிசி,
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி.

॥ श्रीः ॥

॥ ஶ்ரீ: ॥

# ॥ श्रीसुब्रह्मण्यभुजङ्गम् ॥

# ஶ்ரீ ஸுப்³ரஹ்மண்ய பு⁴ஜங்க³ம்

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

[முப்பத்து மூன்று சுலோகங்கள் கொண்ட இந்த ஸுப்ரஹ்மண்ய ஸ்தோத்திர மும் புஜங்க விருத்தத்தில் அமைந்துள்ளது. பலச்ருதியாக உள்ள கடைசி சுலோகத் தில்

**'भुजङ्गाख्यवृत्तेन क्लृप्त स्तवं'**

**'பு⁴ஜங்கா³க்²யவ்ருத்தேன க்ல்ருப்த ஸ்தவம்'**

என்று ஆசார்யாளே இவ்விஷயத்தைக் குறிப்பிடுகிறுர். இது ஒன்றுதான் ஸ்ரீ பகவத் பாதாள் அருளிய ஸுப்ரஹ்மண்ய ஸ்தோத்திரம் என்று தெரிகிறது. ஸ்ரீ சங்கரபகவத் பாதர் விஜய யாத்திரைக் கிரமத்தில் திருச்செந்தூருக்கு விஜயம்செய்து செந்திலாண் டவஊனத் தர்சித்த ஸமயம் இந்த ஸ்தோத்திரத்தை இயற்றியதாகத் தெரிகிறது அவ்வூரில் தனிச் சிறப்புப் பெற்றுள்ள ஸமுத்ரதீரம், கந்தமாதனகிரி, இஃல விபூதி இவைகஊ இங்கு குறிப்பிடுகிறுர். ஸ்கந்தமூர்த்தியின் அவயவங்கஊத் தனித் தனியாகச் சிறந்த முறையில் துதித்து, அவருடைய முழு உருவத்தையும், பிறகு ஸோமாஸ்கந்தமூர்த்தியையும் வர்ணிக்கிறுர். நம் ஒவ்வொரு அவயவமும் பரிவார ங்களும் அவரிடம் ஈடுபடவேண்டிய விதத்தைக் காட்டிக் கடைசியாக ஸ்தோத்திரத் தின் பயஊனக் கூறி முடிக்கிறுர்.]

**(அவதாரிகை)** முதலில் இடையூறு நீங்க கணேசஊனத் துதிக்கிறுர்: -

**सदा बालरूपाऽपि विघ्नाद्रिहन्त्री**
**महादन्तिवक्त्राऽपि पञ्चास्यमान्या ।**
**विधीन्द्रादिमृग्या गणेशाभिधा मे**
**विधत्तां श्रियं काऽपि कल्याणमूर्तिः ॥ १ ॥**

**ஸதா³ பா³லரூபா(அ)பி விக்⁴நாத்³ரி ஹந்த்ரீ**
**மஹா த³ந்திவக்த்ரா(அ)பி பஞ்சாஸ்யமான்யா ।**
**விதீ⁴ந்த்³ராதி³ம்ருக்³யா க³ணேஶாபி⁴தா⁴ மே**
**வித⁴த்தாம் ஶ்ரியம் கா(அ)பி கல்யாணமூர்தி: ॥ 1 ॥**

| | | |
|---|---|---|
| **सदा**<br>**ஸதா3** | = | எப்பொழுதும், |
| **बालरूपाऽपि**<br>**பா3லரூபா(அ)பி** | = | குழந்தையின் வடிவத்தை உடையதாயிருப்பினும், |
| **विघ्नाद्रिहन्त्री**<br>**விக்4நாத்3ரி ஹந்த்ரீ** | = | இடையூறுகளாகிய மலைகளைப் பிளக்கும் தன்மை வாய்ந்ததும், |
| **महा**<br>**மஹா** | = | பெரிய, |
| **दन्ति**<br>**த3ந்தி** | = | யானையின், |
| **वक्त्रा अपि**<br>**வக்த்ரா அபி** | = | முகத்தையுடையதாயினும், |
| **पञ्चास्य**<br>**பஞ்சாஸ்ய** | = | சிம்மத்தினால் (பரமேச்வரனால்), |
| **मान्या**<br>**மான்யா** | = | போற்றத்தக்கதாயும், |
| **विधी**<br>**விதீ4** | = | பிரம்மா, |
| **इन्द्रादि**<br>**இந்த்3ராதி3** | = | இந்திரன் முதலியவர்களால், |
| **मृग्या**<br>**ம்ருக்3யா** | = | தேடத்தக்கதுமான, |
| **गणेशाभिधा**<br>**க3ணேஶாபி4தா4** | = | கணேசன் என்ற பெயர் கொண்ட, |
| **काऽपि**<br>**கா(அ)பி** | = | ஓர், |
| **कल्याणमूर्तिः**<br>**கல்யாணமூர்தி:** | = | அற்புத மங்களமூர்த்தியானது, |
| **मे**<br>**மே** | = | எனக்கு, |
| **श्रियं**<br>**ஶ்ரியம்** | = | ஐசுவர்யத்தை, |
| **विधत्तां**<br>**வித4த்தாம்** | = | வழங்கட்டும். |

விநாயகப்பெருமான் குழந்தை உருவத்துடன் இங்கு தோன்றுகின்றார். பாலனாயிருப்பினும் அவர் அபால ஸத்வமுடையவர். அதாவது குழந்தைபோல் தோன்றி

னும் அவர் மிகுந்த வலிமை வாய்ந்தவர். மலைபோன்ற இடையூறுகளையும் உடைத்தெறியும் ஆற்றல் பெற்றவர். யானைமுகத்தையுடையவர் இவ்வாறு இருப்பினும் சிம்மத்தினால் போற்றப்பட்டவர். யானைக்கும் சிம்மத்திற்கும் இயற்கையிலேயே பகை ஏற்பட்டிருக்கின்றது. ஆதலால் சிம்மம் எப்படி இவரைப் போற்றமுடியும்? இங்கு சிம்மம் யானையைப் போற்றுதல் பொருத்தமற்றது என்று தோன்றுகின்றது. ஆனால் இவற்றின் உண்மையான உரையை, அறியும்பொழுது இவ்வாறு கூறுவதில் மிகப் பொருத்தம் உள்ளதை நன்கு காணலாம். பஞ்சாஸ்ய என்னும் சொல் பரமேச்வரனைக் குறிக்கின்றது. அதனால் இவர் தன் தந்தையாகிய பரமேச்வரனாலேயே போற்றப்படுகின்றவர் என்ற பொருள் விளங்குகின்றது. விநாயகமூர்த்தி ஸகல விதமான இடையூறுகளையும் அகற்றும் வன்மை உள்ள வராதலால் பிரம்மாதி தேவதைகளும் இவரைத் தேடி வழிபடுகின்றனர். மிகுந்த அத்புதமான தோற்றத்தைப் பெற்ற விநாயகக் கடவுள் நமது இடையூறுகளைப் போக்கி ஸகல ஐச்வர்யங்களையும் வழங்குவாராக. **(1)**

**न जानामि पद्यं न जानामि गद्यं**
**न जानामि शब्दं न जानामि चार्थम् ।**
**चिदेका षडास्या हृदि द्योतते मे**
**मुखान्निःसरन्ते गिरश्चापि चित्रम् ॥ २ ॥**

**ந ஜாநாமி பத்³யம் ந ஜாநாமி க³த்³யம்**
**ந ஜாநாமி ஶப்³த³ம் ந ஜாநாமி சார்த²ம் ।**
**சிதே³கா ஷடா³ஸ்யா ஹ்ருதி³ த்³யோததே மே**
**முகா²ந்நிꞏஸரந்தே கி³ரஶ்சாபி சித்ரம் ॥ 2 ॥**

**पद्यं** = சுலோகத்தை,
**பத்³யம்**
**न जानामि** = யான் அறியேன்,
**ந ஜாநாமி**
**गद्यं** = உரை நடையையும்,
**க³த்³யம்**
**न जानामि** = யான் அறியேன்,
**ந ஜாநாமி**
**शब्दं** = சொல்லையும்,
**ஶப்³த³ம்**
**न जानामि** = யான் அறியேன்,
**ந ஜாநாமி**
**अर्थं च** = பொருளையும்,
**அர்த²ம் ச**

**न जानामि** = யான் அறியேன்,
**ந ஜாநாமி**
**मे** = என்னுடைய,
**மே**
**हृदि** = மனதில்,
**ஹ்ருதி³**
**षडास्या** = ஆறு முகங்களையுடைய,
**ஷடா³ஸ்யா**
**एका** = ஓர்,
**ஏகா**
**चित्** = ஞான ஒளி,
**சித்**
**द्योतते** = விளங்குகின்றது,
**த்³யோததே**
**मुखात्** = (என்னுடைய) முகத்திலிருந்து,
**முகா²த்**
**गिरश्चापि** = வார்த்தைகளும்,
**கி³ரஶ்சாபி**
**चित्रं** = அழகாக,
**சித்ரம்**
**निसरन्ते** = பெருக்கெடுத்து வருகின்றன.
**நிஸரந்தே**

ஆறுமுகக்கடவுள் ஞானஸ்வரூபி. அவனை வழிபடுகின்றவனுக்கு புலமை இல்லாவிடினும் பக்திப் பெருக்கால் அவனுக்கு ஸ்துதிசெய்யும் சக்தி ஏற்பட்டு விடுகின்றது என்பது இதனுல் நன்கு விளங்குகின்றது. ஸ்ரீ சங்கர பகவத்பாதர் எல்லா மறிந்தவர். அப்படியிருப்பினும் தமக்கு யாதும் தெரியாதென அவர் கூறுவது அவருடைய அடக்கத்தையே விளக்குகின்றது. மேலும் பக்திப்பெருக்கால் முருகனை த்யானம் செய்யும்பொழுது ஆறுமுகங்களுடன் கூடிய அக்கடவுள் ஜ்யோதி ஸ்வரூப மாக அவருக்குக் காட்சியளிக்கின்ருர். அவருடைய கருணுகடாக்ஷத்தால் சிறந்த பாக்கள் அவர் முகத்திலிருந்து கிளம்புகின்றன. இதனுல் இவைகள் அருட்பாக்கள் என்பது நன்கு புலனுகின்றது. இவைகளைப்பாடுவதால் சகல ஸித்திகளும் ஏற்படும் என்று சொல்லவாவேண்டும். இந்த ஸ்தோத்திரம் சொல்பவர்களும் மிகுந்த ஒளி பொருந்திய ஆறுமுகக்கடவுளை மனதில் தியானிக்க வேண்டும். **(2)**

**मयूराधिरूढं महावाक्यगूढं मनोहारिदेहं महच्चित्तगेहम् ।**
**महीदेवदेवं महावेदभावं महादेवबालं भजे लोकपालम् ॥ ३ ॥**

**மயூராதி4ரூட4ம் மஹாவாக்ய கூ3ட4ம்**
**மனோஹாரிதே3ஹம் மஹச்சித்தகே3ஹம் ।**
**மஹீதே3வதே3வம் மஹாவேத3பா4வம்**
**மஹாதே3வபா3லம் ப4ஜே லோகபாலம் ॥ 3 ॥**

| | | |
|---|---|---|
| **मयूराधिरूढं** **மயூராதி4ரூட4ம்** | = | மயில் வாஹனத்தில் அமர்ந்திருப்பவனும், |
| **महावाक्य** **மஹாவாக்ய** | = | தத்வமஸி, முதலிய மஹாவாக்யங்களில், |
| **गूढं** **கூ3ட4ம்** | = | பொதிந்திருப்பவரும், |
| **मनोहारि** **மனோஹாரி** | = | மனதைக்கவரும், |
| **देहं** **தே3ஹம்** | = | உடலை உடையவரும், |
| **महच्चित्त** **மஹச்சித்த** | = | பெரியோர்களின் மனதை, |
| **गेहम्** **கே3ஹம்** | = | வீடாகக்கொண்டவரும், |
| **महीदेव** **மஹீதே3வ** | = | அந்தணர்களின், |
| **देवं** **தே3வம்** | = | கடவுளாயும், |
| **महावेदभावं** **மஹாவேத3பா4வம்** | = | பெருமை வாய்ந்த மறை நூல்களின் கருத்தாகத்தோன்றுகின்றவரும், |
| **लोकपालं** **லோகபாலம்** | = | உலகங்களைக் காக்கின்ற வருமான, |
| **महादेव** **மஹாதே3வ** | = | பரமேச்வரனுடைய, |
| **बालं** **பா3லம்** | = | குழந்தையான ஷண்முகனை, |
| **भजे** **ப4ஜே** | = | ஸேவிக்கின்றேன். |

இங்கு சொற்றொடர்கள் மிகவும் விசித்ரமாக அமைந்திருப்பதைக் காணலாம். ஞானானந்த ஸ்வரூபியான ஆறுமுகன் ஸகுணனாயும் நிர்குணனாயும் ஒரே காலத்தில் விளங்குகின்றான். அவன் தனக்கே உரிய அழகிய மயில் வாஹனத்தில் அமர்ந்திருக்கின்றான். ஆனால் அவனுடைய உண்மையை 'தத்வமஸி' முதலிய

மஹாவாக்யங்கள் தான் விளக்க வல்லமையுடையதாக இருக்கின்றன. அவனுடைய அழகிய தோற்றம் பார்ப்பவர்களின் மனதைக் கவர்கின்றது. இருப்பினும் அவன் அணுவினும் நுண்ணிய சான்றோர்களின் இருதய கமலத்தில் பதுங்கிக்கிடக்கின்றான். அவன் உலகில் போற்றப்படும் அந்தணர்களின் ஆராத்ய தெய்வமாகத் திகழ்கின்றான். அதனால் வேதங்களின் உட்கருத்தாக உரைபவனும் அவனே. மஹாதேவனின் சிறு குமாரனாய் இருந்தபோதிலும் அவன் அரக்கர்களை அழித்து உலகை உய்வித்தான். அவ்வுத்தமபுத்திரனைப் போற்றுவோமாக. **(3)**

**(அவதாரிகை)** கடற்கரையில் வஸிக்கும் பெருமையை இரண்டு சுலோகங்களில் கூறுகிறார்: -

**यदा संनिधानं गता मानवा मे**
**भवांभोधिपारं गतास्ते तदैव ।**
**इति व्यञ्जयन्सिन्धुतीरे य आस्ते**
**तमीडे पवित्रं पराशक्तिपुत्रम् ॥ ४ ॥**

யதா$^{3}$ **ஸம்நிதா$^{4}$னம் க$^{3}$தா மானவா மே**
**ப$^{4}$வாம்போ$^{4}$தி$^{4}$பாரம் க$^{3}$தாஸ்தே ததை$^{3}$வ ।**
**இதி வ்யஞ்ஜயன் ஸிந்து$^{4}$தீரே ய ஆஸ்தே**
**தமீடே$^{3}$ பவித்ரம் பராஶக்தி புத்ரம் ॥ 4 ॥**

**यदा** = எப்பொழுது,
**யதா$^{3}$**

**मानवा:** = மனிதர்கள்,
**மானவா:**

**मे** = என்னுடைய,
**மே**

**संनिधानं** = ஸந்நிதியை,
**ஸம்நிதா$^{4}$னம்**

**गता:** = அடைந்தார்களோ,
**க$^{3}$தா:**

**तदा एव** = அப்பொழுதே,
**ததா$^{3}$ ஏவ**

**ते** = அவர்கள்,
**தே**

**भवांभोधि** = உலக வாழ்க்கையாகிய கடலின்,
**ப$^{4}$வாம்போ$^{4}$தி$^{4}$**

**पारं** = கரையை,
**பாரம்**

| | | |
|---|---|---|
| **गता:** **க³தா:** | = | அடைந்தவர்களாகின்றனர், |
| **इति** **இதி** | = | என்று, |
| **व्यञ्जयन्** **வ்யஞ்ஜயன்** | = | மறைமுகமாக வெளிப்படுத்திக்கொண்டு, |
| **य:** **ய:** | = | எவர், |
| **सिन्धुतीरे** **ஸிந்து⁴தீரே** | = | சமுத்திரத்தின் கரையில், |
| **आस्ते** **ஆஸ்தே** | = | இருக்கின்ருரோ, |
| **तं** **தம்** | = | அப்படிப்பட்ட, |
| **पवित्रं** **பவித்ரம்** | = | உலகைப் பரிசுத்தம் செய்கின்ற, |
| **पराशक्तिपुत्रं** **பராஶக்திபுத்ரம்** | = | பராசக்தியின் புதல்வரான ஸுப்ரமண்யஜன |
| **ईडे** **ஈடே³** | = | போற்றுகிறேன். |

சாதாரணமாக ஆற்றின்கரையில் ஓடக்காரர்கள் உட்கார்ந்திருப்பார்கள். அவர்கள் ஆற்றைக்கடக்க விரும்புகின்றவர்கஜளத் தமது ஓடங்களில் ஏற்றிச்சென்று அக்கரை சேர்ப்பார்கள். அதேபோல் ஸுப்ரஹ்மண்யர் பெரிய ஸமுத்ரக்கரையில் அமர்ந்திருக்கிருர். இன்றும் திருச்செந்தூர் என்ற புண்ய க்ஷேத்ரத்தில் சமுத்திரக்கரை யில் முருகனுடைய கோயில் அமைந்திருப்பதைக் காணலாம். இந்த பூவுலக வாழ்க்கையென்பது ஓர் மஹா ஸமுத்ரம். இதில் அகப்பட்டவன் கரையேறுவது அஸாத்யம். ஆஞல் இப்பிறவிக்கடஜலக் கடக்கச் செய்வதற்காக ஓர் ஓடக்காரன் கரைமீது அமர்ந்திருக்கிருன். அவனே ஞான ஸ்வரூபி. ஞானமென்ற ஓடத்தால் தன்ஜன அண்டியவர்கஜள அவர் கரையேற்றிவிடுகின்ருர். இதை வெளிப்படுத்தவே அவன் அவ்வாறு காத்துக்கொண்டிருக்கிருன். இவனுக்கு ஏது இவ்வளவு சக்தி என்பதை 'பராசக்தி, புத்ரம்' என்ற சொல் விளக்குகின்றது. பராசக்தியின் புத்ரனல்ல வா அவன். தாயிடம் பெற்ற ஒப்பற்ற சக்தியே அவனுக்கு அவ்வளவு வல்லமையை ஊட்டுகின்றது. ஆதலால் அவன் உலகின்கண் உரையும் அறியாமையை அகற்றி அஜனவரையும் அக்கரை சேர்க்கின்ருன். அவஜன நாம் போற்றுவோமாக. **(4)**

**यथाब्धेस्तरङ्गा लयं यन्ति तुङ्गास्तथैवापद: सन्निधौ सेवतां मे ।**
**इतीवोर्मिपंक्तीर्नृणां दर्शयन्तं सदा भावये हृत्सरोजे गुहं तम् ॥ ५ ॥**

**யதா²ப்³தே⁴ஸ்தரங்கா³ லயம் யந்தி துங்கா³-**
**ஸ்ததை²வாபத³꞉ ஸந்நிதௌ⁴ ஸேவதாம் மே ।**
**இதீவோர்மிபங்க்தீர் ந்ருணாம் த³ர்ஶயந்தம்**
**ஸதா³ பா⁴வயே ஹ்ருத்ஸரோஜே கு³ஹம் தம் ॥ 5 ॥**

**यथा** = எவ்விதம்,
**யதா²**
**अब्धेः** = ஸமுத்திரத்தினுடைய,
**அப்³தே⁴꞉**
**तुङ्गा** = உயரமான,
**துங்கா³**
**तरङ्गाः** = அலைகள்,
**தரங்கா³꞉**
**लयं यन्ति** = மறைந்துபோகின்றனவோ,
**லயம் யந்தி**
**तथा एव** = அவ்விதமே,
**ததா² ஏவ**
**मे** = என்னுடைய,
**மே**
**सन्निधौ** = ஸந்நிதியில்,
**ஸந்நிதௌ⁴**
**सेवतां** = ஸேவிக்கின்றவர்களுடைய,
**ஸேவதாம்**
**आपदः** = ஆபத்துக்களும் நீங்கிவிடுகின்றன,
**ஆபத³꞉**
**इतीव** = என்பதுபோல,
**இதீவ**
**नृणां** = மனிதர்களுக்கு,
**ந்ருணாம்**
**ऊर्मिपंक्तीः** = அலைகளின் வரிசைகளை,
**ஊர்மிபங்க்தீ꞉**
**दर्शयन्तं** = காட்டுகின்றவரான,
**த³ர்ஶயந்தம்**
**तं गुहं** = அந்த குகப்பெருமானை,
**தம் கு³ஹம்**
**सदा** = எப்பொழுதும்
**ஸதா³**

**हृत्सरोजे** = எனது இருதயகமலத்தில்,

**ஹ்ருத்ஸரோஜே**

**भावये** = த்யானம் செய்கிறேன்.

**பா⁴வயே**

குஹன் ஸமுத்ரக்கரையில் அமர்ந்திருக்கின்றுர் என்று ஏற்கனவே கூறப்பட்டுள்ளது. அவ்வாறு அவர் அமர்ந்திருப்பதற்கு மற்றேர் காரணமும் இங்கு காட்டப்படுகின்றது. ஸமுத்திரத்தில் பயங்கரமான அலைகள் வரிசைவரிசையாகக் கிளம்புகின்றன. ஆனுல் அவைகள் ஸமுத்திரத்திலேயே மறைந்துவிடுகின்றன. அதுபோல ஸம்ஸாரமாகிய கடலில் தத்தளிக்கும் ஒவ்வொருவனுக்கும் ஆபத்துக்கள் ஏற்பட்டுக் கொண்டே இருக்கின்றன. ஆனுல் பகவானை ஸேவிக்கின்றவன் அந்த ஆபத்துக்களினின்றும் விடுபடுகிறுன். அந்த ஆபத்துக்கள் அலைபோல் தோன்றி உடனே மறைந்து விடுகின்றன என்பதைக் கடவுள் இந்த அலைகளின் உதாரணத்தைக்கொண்டு நன்கு விளக்குகின்றுர். அப்படிப்பட்ட குஹப்பெருமானைப் போற்றவேண்டும். **(5)**

**(அவதாரிகை)** இரு சுலோகங்களால் கந்தமாதன கிரியை வர்ணிக்கிறுர்: -

**गिरौ मन्निवासे नरा येऽधिरूढा -**
**स्तदा पर्वते राजते तेऽधिरूढाः ।**
**इतीव ब्रुवन्गन्धशैलाधिरूढः**
**स देवो मुदे मे सदा षण्मुखोऽस्तु ॥ ६ ॥**

**கி³ரௌ மந்நிவாஸே நரா யே(அ)தி⁴ரூடா⁴ -**
**ஸ்ததா³ பர்வதே ராஜதே தே(அ)தி⁴ரூடா⁴: ।**
**இதீவ ப்³ருவன் க³ந்த⁴ ஶைலாதி⁴ரூட⁴:**
**ஸ தே³வோ முதே³ மே ஸதா³ ஷண்முகோ²(அ)ஸ்து ॥ 6 ॥**

**ये नरा** = எந்த மனிதர்கள்,

**யே நரா**

**मन्निवासे** = என்னுடைய இருப்பிடமாகிய,

**மந்நிவாஸே**

**गिरौ** = மலையில்,

**கி³ரௌ**

**अधिरूढाः** = ஏறியிருக்கின்றுர்களோ,

**அதி⁴ரூடா⁴:**

**ते** = அவர்கள்,

**தே**

**तदा** = அப்பொழுது,

**ததா³**

| | | |
|---|---|---|
| **राजते पर्वते**<br>**ராஜதே பர்வதே** | = | வெள்ளி மலையில், |
| **अधिरूढाः**<br>**அதி⁴ரூடா⁴:** | = | ஏறியவர்களாக ஆகிறார்கள், |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **ब्रुवन् इव**<br>**ப்³ருவன் இவ** | = | சொல்கின்றவர்போல, |
| **गन्धशैलाधिरूढः**<br>**க³ந்த⁴ஶைலாதி⁴ரூட⁴:** | = | கந்தமாதன மலையின் மீது ஏறியுள்ள, |
| **सः**<br>**ஸ:** | = | அந்த, |
| **षण्मुखः देव**<br>**ஷண்முக²: தே³வ** | = | ஆறுமுகமுள்ள கடவுள், |
| **मे**<br>**மே** | = | எனக்கு, |
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **मुदे**<br>**முதே³** | = | சந்தோஷத்திற்காக |
| **अस्तु**<br>**அஸ்து** | = | இருக்கட்டும். |

ஆறுமுகன் குன்றுதோறும் குடியிருப்பதை அனைவரும் அறிவர். அது போலவே இங்கு அவர் கந்தமாதனம் என்ற மலைமீது அமர்ந்துள்ளார். அவ்வாறு அவர் வீற்றிருக்கும் மலை மீது எவன் ஏறுகின்றானோ அவன் சகல பாபங்களும் நீங்கப் பெற்றுக் கைலயங்கிரியை அடைவான் என்பதைக் காட்டவே அவர் அங்கு அமர்ந்து ள்ளார் போலும். ஆகவே சிவபெருமானின் ஸந்நிதியையடைந்து கைவல்ய சுகத் தைப் பெற விரும்புகின்றவன் ஆறுமுகன் வீற்றிருக்கும் மலைமீது ஏறி அவனைப் போற்ற வேண்டும். அவனது அருள்பெற்றால் தான் ஸுகமாக வாழலாம். ஆதலால் அம்முருகனை வழிபட்டு ஸுகத்தையடைவோமாக. **(6)**

**महाम्भोधितीरे महापापचोरे मुनीन्द्रानुकूले सुगन्धाख्यशैले ।**
**गुहायां वसन्तं स्वभासा लसन्तं जनार्तिं हरन्तं श्रयामो गुहं तम् ॥ ७ ॥**

**மஹாம்போ⁴தி⁴தீரே மஹாபாபசோரே**
**முனிந்த்³ரானுகூலே ஸுக³ந்தா⁴க்²ய ஶைலே ।**
**கு³ஹாயாம் வஸந்தம் ஸ்வபா⁴ஸா லஸந்தம்**
**ஜனார்திம் ஹரந்தம் ஶ்ரயாமோ கு³ஹம் தம் ॥ 7 ॥**

**महापापचोरे** = கொடிய பாபங்களை அபஹரிக்கின்ற,

**மஹாபாபசோரே**

**महाम्भोधि** = பெரிய சமுத்திரத்தினுடைய,

**மஹாம்போ⁴தி⁴**

**तीरे** = கரையில்,

**தீரே**

**मुनिन्द्रानुकूले** = சிறந்த முனிவர்களுக்கு நன்மை பயக்கும்,

**முனிந்த்³ரானுகூலே**

**सुगन्धाख्यशैले** = சுகந்தம் என்ற பெயர்கொண்ட கந்தமாதன கிரியில்,

**ஸுக³ந்தா⁴க்²ய ஶைலே**

**गुहायां** = குகையில்,

**கு³ஹாயாம்**

**वसन्तं** = வசிக்கின்றவரும்,

**வஸந்தம்**

**स्वभासा** = தன்னுடைய காந்தியினால்,

**ஸ்வபா⁴ஸா**

**लसन्तं** = விளங்குகின்றவரும்,

**லஸந்தம்**

**जनार्तिं** = ஜனங்களுடைய துன்பங்களை,

**ஜனார்திம்**

**हरन्तं** = போக்குகின்றவருமான,

**ஹரந்தம்**

**तं गुहं** = அந்த குஹப்பெருமானை

**தம் கு³ஹம்**

**श्रयामः** = சரணமடைகின்றோம்.

**ஶ்ரயாம:**

தெற்குத் திக்கிலுள்ள சமுத்திரம் மிதப் பெருமை வாய்ந்தது. அங்கு ஸ்நாநம் செய்கின்றவர்கள் பாபம் நீங்கப்பெற்றவர்களாய் புனிதமாகின்றனர். ஆங்கு கந்த மாதனகிரி என்று பிரசித்திபெற்ற ஒர் மலை விளங்குகின்றது. அதில் முனீஸ்வரர்கள் வாஸம்செய்து வருகின்றனர். அம்மலைக் குஹையில் குஹன் வாஸம் செய்து கொண்டிருக்கின்றார். அவரது தேகத்தின் காந்தியால் அம்மலை முழுவதும் தேஜோ மயமாய் ஜ்வலிக்கின்றது. அக்குமரன் தன்னை அண்டிய பக்தர்களின் துன்பங்களனைத்தையும் களைந்து மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைத் தருகின்றார். அப்படிப்பட்ட குஹப் பெருமானை நாம் சரண்புக வேண்டும். **(7)**

**(அவதாரிகை)** குஹன் மஞ்சத்தில் அமர்ந்திருப்பதைக் கூறுகிறார்: -

**लसत्स्वर्णगेहे नृणां कामदोहे**
**सुमस्तोमसंछन्नमाणिक्यमञ्चे ।**
**समुद्यत्सहस्रार्कतुल्यप्रकाशं**
**सदा भावये कार्तिकेयं सुरेशम् ॥ ८ ॥**

**லஸத் ஸ்வர்ணகே³ஹே ந்ருணாம் காமதோ³ஹே**
**ஸுமஸ்தோம ஸஞ்ச²ன்ன மாணிக்ய மஞ்சே ।**
**ஸமுத்³யத்ஸஹஸ்ரார்கதுல்யப்ரகாஶம்**
**ஸதா³ பா⁴வயே கார்திகேயம் ஸுரேஶம் ॥ 8 ॥**

| | | |
|---|---|---|
| **लसत्** <br> **லஸத்** | = | பிரகாசிக்கின்ற, |
| **स्वर्णगेहे** <br> **ஸ்வர்ணகே³ஹே** | = | பொன்மயமான குஹை வீட்டில், |
| **नृणां** <br> **ந்ருணாம்** | = | மனிதர்களின், |
| **कामदोहे** <br> **காமதோ³ஹே** | = | அபீஷ்டங்களை நிறைவேற்றுகின்றதும், |
| **सुमस्तोम** <br> **ஸுமஸ்தோம** | = | பூங்கொத்துகளால், |
| **संछन्न** <br> **ஸஞ்ச²ன்ன** | = | மறைக்கப்பட்ட, |
| **माणिक्यमञ्चे** <br> **மாணிக்ய மஞ்சே** | = | ரத்ன மயமான கட்டிலில், |
| **समुद्यत्** <br> **ஸமுத்³யத்** | = | உதிக்கின்ற, |
| **सहस्रार्क** <br> **ஸஹஸ்ரார்க** | = | ஆயிரக்கணக்கான சூரியர்களுக்கு, |
| **तुल्य** <br> **துல்ய** | = | ஒப்பான, |
| **प्रकाशं** <br> **ப்ரகாஶம்** | = | காந்தியையுடையவரும், |
| **सुरेशम्** <br> **ஸுரேஶம்** | = | தேவர்களுக்கு அதிபதியுமான, |
| **कार्तिकेयं** <br> **கார்திகேயம்** | = | கிருத்திகா தேவதைகளால் போஷிக்கப்பட்ட குகப்பெருமானை, |

| | | |
|---|---|---|
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **भावये**<br>**பா⁴வயே** | = | த்யானம் செய்கிறேன். |

முருகக்கடவுள் கிருத்திகை தேவதைகளால் பாலூட்டி வளர்க்கப்பட்டவர். கிருத்திகைகள் அறுவராவர். அவர்களனைவரையும் மகிழ்விக்க எண்ணிய எம்பெருமான் ஆறுமுகங்களை எடுத்துக்கொண்டமையால் அவருக்கு ஆறுமுகன் என்ற பெயர் வழங்கலாயிற்று. கிருத்திகா தேவதைகள் அவரை வளர்த்ததால் அவர் கார்த்திகேயன் என்று பிரசித்திபெற்றுர். அவரது தேஹகாந்தி ஆயிரக்கணக்கான உதய சூர்யர்களையும் தோற்கச்செய்தது. இவர் பிறந்த உடனேயே தேவஸேனைகளின் தலைவனுக ஆகி அரக்கர் குழாத்தை அழித்தொழித்தார். அவர் வசிக்கும் குஹை பொன்மயமான ஒளிபெற்று மானிடர்களின் சகல மனோபீஷ்டங்களையும் நிறைவேற்றும் வல்லமை வாய்ந்து விளங்குகின்றது. அதுபோலவே அவர் வீற்றிருக்கும் ரத்னங்களிழைத்த மஞ்சமும் மாட்சிபெற்றுள்ளது. அவரது குஹையும் மஞ்சமுமே பக்தர்களின் எண்ணங்களை நிறைவேற்றுமாயின் அம் முருகக்கடவுள் தன்னையண்டியவரின் கோரிக்கைகளைப் பூர்த்திசெய்வார் என்பதைச் சொல்லவா வேண்டும்?

**(அவதாரிகை)** திருப்பாதத்தை வர்ணிக்கிறுர்: -

**रणद्धंसके मञ्जुलेऽत्यन्तशोणे**
**मनोहारिलावण्यपीयूषपूर्णे ।**
**मनःषट्पदो मे भवक्लेशतप्तः**
**सदा मोदतां स्कन्द ते पादपद्मे ॥ ९ ॥**

**ரணத்³த⁴ம்ஸகே மஞ்ஜுலே(அ)த்யந்தஶோணே**
**மனோஹாரி லாவண்ய பீயூஷபூர்ணே ।**
**மன꞉ஷட்பதோ³ மே ப⁴வக்லேஶதப்த꞉**
**ஸதா³ மோத³தாம் ஸ்கந்த³ தே பாத³பத்³மே ॥ 9 ॥**

| | | |
|---|---|---|
| **स्कन्द**<br>**ஸ்கந்த³** | = | ஏ முருகக்கடவுளே, |
| **रणत्**<br>**ரணத்** | = | ஒலிக்கின்ற, |
| **हंसके**<br>**ஹம்ஸகே** | = | பாதஸரங்களையுடையதும் (அன்னங்களை யுடையதும்), |
| **मञ्जुले**<br>**மஞ்ஜுலே** | = | மென்மையானதும், |

| | | |
|---|---|---|
| **अत्यन्तशोणे** | = | மிகவும் சிவந்ததும், |
| **அத்யந்தஶோணே** | | |
| **मनोहारि** | = | மனதைக் கவர்கின்ற, |
| **மனோஹாரி** | | |
| **लावण्यपीयूष** | = | அழகு என்ற அமுதம், |
| **லாவண்ய பீயூஷபூ** | | |
| **पूर्णे** | = | நிறைந்ததுமான, |
| **பூர்ணே** | | |
| **ते** | = | உன்னுடைய, |
| **தே** | | |
| **पादपद्मे** | = | பாதமாகிய தாமரையில், |
| **பாத³பத்³மே** | | |
| **भवक्लेश** | = | உலக வாழ்க்கையின் துன்பங்களால், |
| **ப⁴வக்லேஶ** | | |
| **तप्तः** | = | பரிதவிக்கின்ற, |
| **தப்தஃ** | | |
| **मे** | = | என்னுடைய, |
| **மே** | | |
| **मनःषट्पदः** | = | மனமென்ற வண்டானது, |
| **மனஃஷட்பத³ஃ** | | |
| **सदा** | = | எப்பொழுதும், |
| **ஸதா³** | | |
| **मोदतां** | = | மகிழ்ச்சியடையட்டும். |
| **மோத³தாம்** | | |

சூரியனுடைய தாபத்தால் துன்பமடையும் வண்டு தன்னுடைய துன்பம் நீங்க தாமரை மலரை நாடிச்செல்கின்றது. அப்பொற்றுமரையில் அன்னங்கள் பல அமர்ந்து இன்னிசைகளை எழுப்பிக்கொண்டிருக்கின்றன. அம்மலர் மிகவும் மென்மைவாய்ந்த தாயும் தேனைச் சொரிவதாயும் இருப்பதால் அவ்வண்டு அதையண்டி தன்னை மறந்து மட்டற்ற மகிழ்ச்சி பெறுகின்றது. அதேபோல ஸ்கந்தரின் திருவடித் தாமரையும் பக்தர்களுக்கு ஆனந்தத்தைத் தரவல்லது. அவரது திருவடியில் திகழும் பாதஸரங் கள் இன்னிய ஓசைகளையெழுப்புகின்றன. அவரது திருவடி மிகவும் மென்மைவாய்ந் ததாயும் சிவந்த தன்மை பெற்றதாயும் விளங்குகின்றது. அழகெனும் அமுதம் ஆங்கு பெருக்கெடுத்து ஓடுகின்றது. அவ்வாறு பார்ப்போர் மனதைப் பரவசமாக்கும் ஸ்கந்தரின் திருவடித் தாமரைகளை ஸம்ஸாரமென்னும் துன்பத்தில் வாடும் என் மனம் பற்றிக் கொள்ளட்டும். அவ்வாறு முருகக்கடவுளின் பாத கமலங்களை த்யானி ப்பவர்கள் பாத சகல துன்பங்களும் நீங்கப்பெற்று ஸுகத்தையடைகின்றனர் என்பது இதனுல் புலனுகின்றது. **(9)**

**(அவதாரிகை)** ஸ்கந்தனது கடியை (இடுப்பை) த் துதிக்கிறுர்.-

**सुवर्णाभदिव्याम्बरैर्भासमानां**
**क्वणत्किङ्किणीमेखलाशोभमानाम् ।**
**लसद्धेमपट्टेन विद्योतमानां**
**कटिं भावये स्कन्द ते दीप्यमानाम् ॥ १० ॥**

**ஸுவர்ணுப⁴தி³வ்யாம்ப³ரைர்பா⁴ஸமானும்**
**க்வணத்கிங்கிணீமேக²லாஶோப⁴மானும் ।**
**லஸத்³தே⁴மபட்டேன வித்³யோதமானும்**
**கடிம் பா⁴வயே ஸ்கந்த³ தே தீ³ப்யமானும் ॥ 10 ॥**

| | | |
|---|---|---|
| **स्कन्द** ஸ்கந்த³ | = | ஏ கந்த ஸ்வாமியே, |
| **सुवर्णाभ** ஸுவர்ணுப⁴ | = | பொன்ஊனப்போல் அழகிய, |
| **दिव्याम्बरैः** தி³வ்யாம்ப³ரை: | = | உயர்ந்த ஆடைகளால், |
| **भासमानां** பா⁴ஸமானும் | = | பிரகாசிக்கின்றதும், |
| **क्वणत्** க்வணத் | = | ஒலிக்கின்ற, |
| **किङ्किणी** கிங்கிணீ | = | சிறிய மணிகஊயுடைய, |
| **मेखला** மேக²லா | = | ஒட்டியாணத்தால், |
| **शोभमानां** ஶோப⁴மானும் | = | அழகுவாய்ந்ததும், |
| **लसद्** லஸத்³ | = | காந்திவீசும், |
| **हेमपट्टेन** ஹேமபட்டேன | = | தங்கப்பட்டத்தால், |
| **विद्योतमानां** வித்³யோதமானும் | = | மின்னுகின்றதும், |
| **दीप्यमानां** தீ³ப்யமானும் | = | இயற்கையாகவே ஒளி வீசுகின்றதுமான, |
| **ते** | = | உன்னுடைய, |

**தே**
**कटिं** = இடையை,
**கடிம்**
**भावये** = த்யானம் செய்கிறேன்.
**பா⁴வயே**

கந்தனின் இடை இயற்கையிலேயே மிகுந்த காந்தியை உடையது மேலும் அது சிறந்த பொன்னின் நிறத்தையுடைய ஆடைகளால் அலங்கரிக்கப்பெற்று விளங் குகின்றது. அதற்குமேல் விளங்கும் ஓட்டியாணத்திலுள்ள சிறிய மணிகள் இன்னிசை களையெழுப்புகின்றன். அவ்விடையைச் சுற்றிக் கட்டப்பட்டிருக்கும் தங்கப் பட்டமும் அதன் ஒளியைப் பன்மடங்காகப் பெருக்குகின்றது. இவ்வளவு தேஜோமயமான அவ்விடையை யான் என் மனதில் த்யானம் செய்கின்றேன். ஒளியின் முன் இருள் நிற்காது அல்லவா. ஆகையால் கந்தஸ்வாமியின் ஒளிபொருந்திய இடை நம் மனதில் நிற்குமாகில் நம்முள் நிலவும் இருள் நீங்கப்பெறும். **(10)**

**(அவதாரிகை)** மார்பை வணங்குகிறுர்: -

**पुलिन्देशकन्याघनाभोगतुङ्ग-**
**स्तनालिङ्गनासक्तकाश्मीररागम् ।**
**नमस्याम्यहं तारकारे तवोरः**
**स्वभक्तावने सर्वदा सानुरागम् ॥ ११ ॥**

**புலிந்தே³ஶகன்யாக⁴நாபோ⁴க³துங்க³-**
**ஸ்தனுலிங்க³னுஸக்தகாஶ்மீரராக³ம் ।**
**நமஸ்யாம்யஹம் தாரகாரே தவோரः**
**ஸ்வப⁴க்தாவனே ஸர்வதா³ ஸானுராக³ம் ॥ 11 ॥**

**तारकारे** = தாரகன் என்ற அரக்கனை அழித்தவனே!
**தாரகாரே**
**पुलिन्देश** = வேடர்களின் அரசனுடைய,
**புலிந்தே³ஶ**
**कन्या** = பெண்ணுன வள்ளியினுடைய,
**கன்யா**

**घनाभोगतुङ्ग** = கனமானவைகளும், விரிந்தவைகளும்,
**க⁴நாபோ⁴க³துங்க³** உயர்ந்தவைகளுமான
**स्तनालिङ्गन** = கொங்கைகளைத் தழுவியதால்,
**ஸ்தனுலிங்க³ன**
**आसक्त** = ஒட்டிக்கொண்டுள்ள,

**आसक्त**
**காஶ்மீररागं** = குங்குமத்தின் நிறத்தையுடையதும்,
**காஶ்மீரராக³ம்**
**स्वभक्त** = தன்னுடைய பக்தர்களை,
**ஸ்வப⁴க்த**
**अवने** = காப்பாற்றுவதில்,
**அவனே**
**सर्वदा** = எப்பொழுதும்,
**ஸர்வதா³**
**सानुरागं** = ஆவல் கொண்டதுமான,
**ஸானுராக³ம்**
**तव** = உன்னுடைய,
**தவ**
**उरः** = மார்பை,
**உர:**
**अहं** = நான்,
**அஹம்**
**नमस्यापि** = வணங்குகிறேன்.
**நமஸ்யாபி**

முருகன் தன் பராக்ரமத்தால் தாரகனை வதம் செய்து தேவர்களைக் காத்து அருள்புரிந்தார். அவர் தனது பத்னியாகிய வள்ளியை ஆலிங்கனம் செய்வதால் அவரது மார்பு குங்குமத்தின் அடையாளத்தைப் பெற்று விளங்கலாயிற்று. அவ்வாறு அவரது மார்பில் தோன்றும் ராகம் அதாவது சிவப்பு நிறம் தன்னையண்டிய பக்த கோடிகளை அவர் எப்பொழுதும் காப்பாற்றுவதற்குத் தயாராக இருப்பதைக் காண்பிப் பதுபோல் தோற்றமளிக்கின்றது. அவ்வித மார்பை வணங்குவதால் நமக்கு நேரும் ஆபத்துக்கள் அனைத்தும் அழிந்துவிடும். மேலும் அவர் தேவியின் ஸம்பந்தத்துடன் விளங்குவதால் பக்தர்கள் எவ்விதமான குற்றம் செய்யினும் அம் முருகக்கடவுள் அவர்களைக் காக்க சித்தமாக இருக்கிறார் என்பது தெளிவாகத் தோற்றுகின்றது. **(11)**

**(அவதாரிகை)** கைகளைத் துதிக்கிறார்: -

**विधौ क्लृप्तदण्डान् स्वलीलाधृताण्डान्**
**निरस्तेभशुण्डान् द्विषत्कालदण्डान् ।**
**हतेन्द्रारिषण्डाञ्जगत्त्राणशौण्डान्**
**सदा ते प्रचण्डान् श्रये बाहुदण्डान् ॥ १२ ॥**

**விதௌ⁴ க்லுப்தத³ண்டா³ன் ஸ்வலீலாத்⁴ருதாண்டா³ன்**
**நிரஸ்தேப⁴ஶுண்டா³ன் த்³விஷத்காலத³ண்டா³ன் ।**
**ஹதேந்த்³ராரிஷண்டா³ஞ் ஜக³த்த்ராணஶௌண்டா³ன்**
**ஸதா³ தே ப்ரசண்டா³ன் ஶ்ரயே பா³ஹுத³ண்டா³ன் ॥ 12 ॥**

**विधौ** = பிரம்மதேவனிடத்தில்,
**விதௌ⁴**
**क्लृप्तदण्डान्** = செய்யப்பட்ட தண்டனையை உடையவைகளும்,
**க்லுப்தத³ண்டா³ன்**
**स्वलीला** = தன்னுடைய திருவிளையாட்டினால்,
**ஸ்வலீலா**
**धृताण्डान्** = எல்லா அண்டங்களையும் தாங்கியவைகளும்,
**த்⁴ருதாண்டா³ன்**
**निरस्त** = போக்கப்பட்ட,
**நிரஸ்த**
**इभशुण्डान्** = யானையின் துதிக்கைகளையுடையவைகளும்,
**இப⁴ஶுண்டா³ன்**
**द्विषत्** = பகைவர்களுக்கு,
**த்³விஷத்**
**कालदण्डान्** = யம தண்டமாக இருப்பவைகளும்,
**காலத³ண்டா³ன்**
**हत** = கொல்லப்பட்ட,
**ஹத**
**इन्द्रारिषण्डान्** = இந்திரனுடைய பகைவர்களின் கூட்டங்களை
**இந்த்³ராரிஷண்டா³ன்** யுடையவைகளும்,
**जगत्** = உலகத்தை,
**ஜக³த்**
**त्राण** = காப்பதில்,
**த்ராண**
**शौण्डान्** = வல்லமையுடையவைகளாயும் இருக்கின்ற,
**ஶௌண்டா³ன்**

**ते** = உன்னுடைய,
**தே**
**प्रचण्डान्** = பெரிய,
**ப்ரசண்டா³ன்**
**बाहुदण्डान्** = புஜங்களை,

**பா³ஹுத³ண்டா³ன்**

**सदा** = எப்பொழுதும்,

**ஸதா³**

**श्रये** = அடைகின்றேன்.

**ஶ்ரயே**

முருகனின் பன்னிரு கைகளும் மிகுந்த பலம் வாய்ந்தன. அவைகள் விளையாட்டாகவே எல்லா அண்டங்களையும் காக்கின்றன. பிரம்மதேவனைக் கூடத் தண்டிக்கும் சக்தி பெற்றன. யானையின் வடிவு பெற்ற அரக்கனின் துதிக்கைகளை அறுத்தெரிந்தன. பகைவர்களைத் தண்டிக்கும் யம தண்டமும் இவையே. இந்திரனுடைய சத்ருக்களை அழித்து அவனைக் காத்ததும் இவையே. இவ்வாறு வலிமை பெற்ற ஆறுமுகனின் புஜங்களைப் போற்றுகிறேன்.

முன் ஒரு காலத்தில் முருகக்கடவுள் பிரம்மதேவனிடம் பிரணவத்தின் பொருளைக் கேட்டார். பிரஹ்மாவுக்குச் சரியான பதில் சொல்லத்தெரியவில்லை. ஆதலால் முருகக் கடவுள் பிரம்மதேவனைச் சிறையில் அடைத்தார். மேலும் முருகனுக்கும் தாரகன் என்ற அரக்கனுக்கும் போர் மூண்ட பொழுது தாரகன் யானை முகத்துடன் தோன்றி அவரை எதிர்த்தான். முருகன் தன் கைகளால் அவனது துதிக்கைகளை வெட்டி வீழ்த்தினர் என்ற வரலாறுகள் இங்கு குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

இதனால் முருகனின் புஜங்களை பஜிப்பவர்களுக்கு சத்ரு நாசமும், இஷ்டசித்தியும் ப்ரம்ம ஞானமும் உண்டாகும் என்று தெரிகிறது. **(12)**

**(அவதாரிகை)** முருகனுடைய முகமண்டலங்களை இரு சுலோகங்களால் துதிக்கிறார்: -

**सदा शारदाः षण्मृगाङ्का यदि स्युः**
**समुद्यन्त एव स्थिताश्चेत्समन्तात् ।**
**सदा पूर्णबिम्बाः कलङ्कैश्च हीना-**
**स्तदा त्वन्मुखानां ब्रुवे स्कन्द साम्यम् ॥ १३ ॥**

**ஸதா³ ஶாரதா³: ஷண்ம்ருகா³ங்கா யதி³ ஸ்யு:**
**ஸமுத்³யந்த ஏவ ஸ்தி²தாஶ்சேத் ஸமந்தாத் ।**
**ஸதா³ பூர்ணபி³ம்பா³: கலங்கைஶ்ச ஹீனாஸ்**
**ததா³ த்வன்முகா²னாம் ப்³ருவே ஸ்கந்த³ ஸாம்யம் ॥ 13 ॥**

**स्कन्द** = ஸ்கந்த ஸ்வாமியே,

**ஸ்கந்த³**

**शारदाः** = சரத்காலத்திலுள்ள,

**ஶாரதா³:**

| | | |
|---|---|---|
| **षण्मृगाङ्का:**<br>**ஷண்ம்ருகா³ங்கா:** | = | ஆறு சந்திரர்கள், |
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **यदि स्यु:**<br>**யதி³ ஸ்யு:** | = | இருப்பார்களேயானுல், (அவர்கள் எப்பொழுதும்), |
| **समन्तात्**<br>**ஸமந்தாத்** | = | சுற்றிலும், |
| **समुद्यन्त एव**<br>**ஸமுத்³யந்த ஏவ** | = | உதயமாகிக்கொண்டே, |
| **स्थिताश्वेत्**<br>**ஸ்தி²தாஶ்வேத்** | = | இருப்பார்களேயானுல், |
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **पूर्णबिम्बा:**<br>**பூர்ணபி³ம்பா³:** | = | எல்லா கலைகளுடன் நிறைந்தவர்களாயும், |
| **कलङ्कै: हीनाश्च**<br>**கலங்கை: ஹீநாஶ்ச** | = | களங்கம் அற்றவர்களாயும் இருந்தால், |
| **तदा**<br>**ததா³** | = | அப்பொழுது (அவைகளை), |
| **त्वन्मुखानां**<br>**த்வன்முகா²ளும்** | = | உன் முகங்களுக்கு, |
| **साम्यम्**<br>**ஸாம்யம்** | = | ஒப்பானவையாக, |
| **ब्रुवे**<br>**ப்³ருவே** | = | சொல்வேன். |

உலகில் அழகிய முகத்தை மதிவதனம் என்று கூறுவார்கள். ஆனுல் முருக னுடைய முகங்களுக்கோ நிகர் கிடையாது. ஏனெனில் அவைகள் ஆறும் எப்பொழு தும் பொலிவு பெற்று விளங்குகின்றன. சந்திரனே எனில் ஒன்றே ஒன்று. அவனும் எப்பொழுதும் பூர்ணகலைகளுடன் விளங்குவதில்லை. மேலும் அவனிடம் களங்கம் குடி கொண்டிருக்கின்றது. சரத்காலத்தில் உதய ஸமயத்தில் தான் அவன் மிகவும் அழகாகத்தோன்றுகின்றுன். மற்ற காலங்களில் அவ்வளவு அழகு அவனுக்குக் கிடை யாது. முருகனுடைய ஆறுமுகங்களுக்கும் உவமை கூற ஆறுமதிகள் தேவை. அவைகள் எப்பொழுதும் பூர்ணமாயும் மாசற்றதாயும் பொலிவு பெற்றதாயும் இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் அவைகள் ஆறுமுகங்களுக்கு ஒப்பாகும். சந்திரனைப்பார்ப்பதால் தாபம் நீங்குகின்றது. ஆனந்தம் உண்டாகின்றது. அதுபோல் .

இம்முகங்களை த்யானம் செய்வதாலும் தர்சனம் பண்ணுவதாலும் தாபங்கள் நீங்கி மகிழ்ச்சி ஏற்படும் என்பது தெளிவாகக் காட்டப்படுகின்றது. (13)

**स्फुरन्मन्दहासैः सहंसानि चञ्च-**
**त्कटाक्षावली भृङ्गसङ्घोज्ज्वलानि ।**
**सुधास्यन्दिबिम्बाधराणीशसूनो**
**तवालोकये षण्मुखाम्भोरुहाणि ॥ १४ ॥**

**ஸ்பு²ரன்மந்த³ஹாஸை: ஸஹம்ஸானி சஞ்சத்**
**கடாக்ஷாவலீ ப்⁴ருங்க³ஸங்கோ⁴ஜ்ஜ்வலானி ।**
**ஸுதா⁴ஸ்யந்தி³பி³ம்பா³த⁴ராணீஶஸூனோ**
**தவாலோகயே ஷண்முகா²ம்போ⁴ருஹாணி ॥ 14 ॥**

| | | |
|---|---|---|
| **ईशसूनो** ஈஶஸூனே | = | ஈச்வரனுடைய புத்திரனன முருகக்கடவுளே! |
| **स्फुरन्मन्दहासैः** ஸ்பு²ரன்மந்த³ஹாஸை: | = | விளங்குகின்ற புன்சிரிப்புகளால், |
| **सहंसानि** ஸஹம்ஸானி | = | ஹம்ஸங்களுடன் கூடியவைகளும், |
| **चञ्चत्** சஞ்சத் | = | அசைகின்ற, |
| **कटाक्षावली** கடாக்ஷாவலீ | = | கடைக்கண்களின் வரிசைகளாகிய, |
| **भृङ्गसङ्घोज्ज्वलानि** ப்⁴ருங்க³ஸங்கோ⁴ஜ்ஜ்வலானி | = | வண்டுக் கூட்டங்களால் மிகுந்த ஒளிபொருந்தியவைகளும், |
| **सुधास्यन्दि** ஸுதா⁴ஸ்யந்தி³ | = | அமுதத்தைப் பெருக்குகின்ற, |
| **बिम्बाधराणी** பி³ம்பா³த⁴ராணீ | = | கோவைப்பழங்களைப்போன்ற உதடுகளை உடையவைகளும் ஆகிய, |
| **तव** தவ | = | உம்முடைய, |
| **षण्मुखाम्भोरुहाणि** ஷண்முகா²ம்போ⁴ருஹாணி | = | ஆறுமுகங்களாகிய தாமரைகளை, |
| **अलोकये** அலோகயே | = | பார்க்கிறேன். |

ஈச புத்திரனுடைய ஆறு முகங்களே மலர்ந்த செந்தாமரைகள். அவருடைய முகங்களில் தவழும் புன்சிரிப்புகளே தாமரைகளில் விளையாடும் அன்னங்கள். அவைகளின் கடாக்ஷங்களே தாமரைகளில் சஞ்சரிக்கும் வண்டுகளின் வரிசைகள்.

கோவைப் பழங்களைப் போன்ற உதடுகளிலிருந்து சிந்தும் உமிழ்நீர்களே அமுதம் போன்ற தேன் சொட்டுகள். அம்மாதிரியான முகங்களைத் தரிசனம் செய்வதால் அமுதலாபம் ஏற்படும். இங்கு முருகக் கடவுளின் அழகிய ஆறு முகங்களையும் உருவகப்படுத்தி தாமரைகளாக வர்ணித்திருப்பது குறிப்பிடத்தக்கது. **(14)**

**(அவதாரிகை)** கடாக்ஷத்தை வர்ணிக்கிறார்: -

**विशालेषु कर्णान्तदीर्घेष्वजस्रं**
**दयास्यन्दिषु द्वादशस्वीक्षणेषु ।**
**मयीषत्कटाक्षः सकृत्पातितश्चे-**
**द्भवेत्ते दयाशील का नाम हानिः ॥ १५ ॥**

**விஶாலேஷு கர்ணாந்ததீ³ர்கே⁴ஷ்வஜஸ்ரம்**
**த³யாஸ்யந்தி³ஷு த்³வாத³ஶஸ்வீக்ஷணேஷு ।**
**மயீஷத் கடாக்ஷ: ஸக்ருத் பாதிதஶ்சேத்³**
**ப⁴வேத் தே த³யாஶீல கா நாம் ஹானி: ॥ 15 ॥**

**दयाशील** = கருணை காட்டும் தன்மை வாய்ந்தவரே!
**த³யாஶீல**
**विशालेषु** = அகன்றவைகளும்,
**விஶாலேஷு**
**कर्णान्तदीर्घेषु** = காதுவரை நீண்டவைகளும்,
**கர்ணாந்ததீ³ர்கே⁴ஷு**
**अजस्रं** = இடைவிடாமல்,
**அஜஸ்ரம்**
**दयास्यन्दिषु** = தயவைப் பெருக்குகின்றவைகளுமான,
**த³யாஸ்யந்தி³ஷு**
**द्वादशसु ईक्षणेषु** = உம்முடைய பன்னிரு கண்களிலும் விளங்கும்,
**த்³வாத³ஶஸு ஈக்ஷணேஷு**
**कटाक्षः** = கடைக்கண் பார்வை,
**கடாக்ஷ:**
**मयि** = என்னிடத்தில்,
**மயி**
**सकृत्** = ஒருதடவை,
**ஸக்ருத்**

**ईषत्** = கொஞ்சம்,
**ஈஷத்**

**पातितः चेत्** = விழும்படி செய்யப்படுமாகில்,
**பாதித꞉ சேத்**
**से** = உமக்கு,
**ஸே**
**का नाम् हानिः** = என்ன குறைதான்,
**கா நாம் ஹானி꞉**
**भवेत्** = ஏற்படும்?
**ப⁴வேத்**

முருகனுடைய பன்னிரு கண்களும் மிகுந்த அழகு வாய்ந்தவை. அவைகள் அகன்றனவாயும் காதுவரை நீண்டனவாயும் விளங்குகின்றன். அக்கண்களின் சிறித ளவு பார்வை விழுந்தாலும் மிகுந்த நன்மையே உண்டாகும். ஏனெனில் முருகன் தயாமூர்த்தி. பக்தர்களின் துயரை நீக்கும் தன்மை வாய்ந்தவன். அவனது கடைக்கண் பார்வைகளோ எப்பொழுதும் அமுதத்தைப் பெருக்குகின்றன. அவ்வாறான கடைக்கண் களைப் பக்தர்கள்பால் செலுத்துவதால் அவனுக்கு யாதொரு நஷ்டமும் கிடையாது. பக்தர்களுக்கும் மிகுந்த லாபம் ஏற்படுகிறது. **(15)**

**(அவதாரிகை)** ஸ்கந்தருடைய சிரஸை வணங்குகிறார்: -

**सुताङ्गोद्भवो मेऽसि जीवेति षड्धा**
**जपन्मन्त्रमीशो मुदा जिघ्रते यान् ।**
**जगद्भारभृद्भ्यो जगन्नाथ तेभ्यः**
**किरीटोज्ज्वलेभ्यो नमो मस्तकेभ्यः ॥ १६ ॥**

**ஸுதாங்கோ³த்³ப⁴வோ மே(அ)ஸி ஜீவேதி ஷட்³தா⁴**
**ஜபன்மந்த்ரமீஶோ முதா³ ஜிக்⁴ரதே யான் ।**
**ஜக³த்³பா⁴ரப்⁴ருத்³ப⁴யோ ஜக³ந்நாத² தேப்⁴ய꞉**
**கிரீடோஜ்ஜ்வலேப்⁴யோ நமோ மஸ்தகேப்⁴ய꞉ ॥ 16 ॥**

**सुत** = ஏ குழந்தாய்,
**ஸுத**
**मे** = என்னுடைய,
**மே**
**अङ्गोद्भवः** = அங்கத்திலிருந்து உண்டானவனாக,
**அங்கோ³த்³ப⁴வ꞉**
**असि** = இருக்கின்றாய்,
**அஸி**
**जीव** = நீடூழி வாழ்வாயாக,
**ஜீவ**

**इति** = என்ற,

**இதி**

**मन्त्रं** = மந்திரத்தை,

**மந்த்ரம்**

**षड्धा** = ஆறு தடவை,

**ஷட்3தா4**

**जपन्** = ஜபித்துக்கொண்டு,

**ஜபன்**

**ईशः** = உலகைக் காக்கும் சிவபெருமான்,

**ஈஶ:**

**यान्** = எந்த சிரசுகளை,

**யான்**

**मुदा** = மகிழ்ச்சியுடன்,

**முதா3**

**जिघ्रते** = முகர்கின்றரோ,

**ஜிக்4ரதே**

**जगन्नाथ** = உலகைக்காக்கும் முருகப் பெருமானே,

**ஜக3ந்நாத2**

**तेभ्यः** = அந்த,

**தேப்4ய:**

**जगद्भार** = உலகங்களின் பாரத்தை,

**ஜக3த்3பா4ர**

**भृद्भ्यः** = தாங்குகின்றவைகளும்,

**ப்4ருத்3ப4ய:**

**किरीटोज्ज्वलेभ्यः** = கிரீடங்களால் ஜ்வலிக்கின்றவைகளுமான,

**கிரீடோஜ்ஜ்வலேப்4ய:**

**मस्तकेभ्यः** = மத்தகங்களுக்கு,

**மஸ்தகேப்4ய:**

**नमः** = வணக்கம்.

**நம:**

புத்ரன் தந்தையின் அங்கங்களிலிருந்து உண்டாகின்றன் என்று

**अङ्गादङ्गात् सम्भवा**

**அங்கா3த3ங்கா3த் ஸம்ப4ர்வா**

முதலான மந்திரங்கள் கூறுகின்றன. குழந்தை பிறந்தவுடன் தகப்பனர் தன் மகன் நீடூழி வாழ்வதற்காகச் சில மந்திரங்களைச் சொல்லி உச்சிமுகர்ந்து களிப்பெய்து கின்றர். அதுபோலவே உலகத்திற்கு வழிகாட்டியான சிவபெருமானும் தன் புத்ரனை

ஆறுமுகன் நீண்டகாலம் வாழவேண்டுமென்று ஆசி கூறுகின்றார். தன் மகனின் ஒவ்வொரு சிரஸையும் முகரும்பொழுதும் அவர் மந்திரத்தை ஒருதடவை உச்சரிக் கின்றார். இவ்வாறு ஆறு தடவை மந்திரம் ஓதி ஆறு சிரஸ்ஸுகளையும் முகர்ந்து அளவற்ற மகிழ்ச்சி பெறுகின்றார். ஈசன் உலகைக் காக்கும் வல்லமை வாய்ந்தவன். அதுபோலவே ஈசபுத்திரனும் ஜகத்தை ரக்ஷிக்கின்றான்.

**आत्मा: वे: पुत्रनामासि**

**ஆத்மாः வேः புத்ரநாமாஸி**

என்று மறைகள் பறைசாற்றவில்லையா? குமரனும் ஈசனும் ஒன்று அல்லவா? ஆதலால் உலகின் பாரத்தை உத்தம புத்திரனான குமரன் தனது ஆறு சிரஸுகளாலும் தாங்குகின்றான். அவனுடைய சிரஸுகளில் ரத்னங்கள் பதிப்பிக்கப்பட்ட மகுடங்கள் விளங்குகின்றன. அவனுடைய சிரஸுகளை வணங்கினால் நம்மைக் காக்கும் பொறுப் பையும் அவனே ஏற்றுக்கொள்வான். **(16)**

**(அவதாரிகை)** அங்கங்களை தனித் தனியாக வர்ணித்துவிட்டு முழு உருவத் தையும் தியானிக்கிறார்: -

**स्फुरद्रत्नकेयूरहाराभिराम-**
**श्चलत्कुण्डलश्रीलसद्गण्डभाग: ।**
**कटौ पीतवास: करे चारुशक्ति:**
**पुरस्तान्ममास्तां पुरारेस्तनूज: ॥१७॥**

**ஸ்பு²ரத்³ரத்னகேயூரஹாராபி⁴ராம-**
**ஶ்சலத்குண்ட³லஶ்ரீலஸத்³க³ண்ட³பா⁴க³ः ।**
**கடௌ பீதவாஸः கரே சாருஶக்திः**
**புரஸ்தான்மமாஸ்தாம் புராரேஸ்தனூஜः ॥17॥**

**स्फुरत्** = ஜ்வலிக்கின்ற,
**ஸ்பு²ரத்**

**रत्न** = ரத்னங்கள் பதித்த,
**ரத்ன**

**केयूर** = தோள்வளை,
**கேயூர**

**हार** = முத்துமாலை இவைகளால்,
**ஹார**

**अभिराम:** = மனதைக் கவருகின்றவரும்,
**அபி⁴ராமः**

| | | |
|---|---|---|
| **चलत्** | = | அசைகின்ற, |
| **சலத்** | | |
| **कुण्डलश्री** | = | குண்டலங்களின் அழகினுல், |
| **குண்ட³லஸ்ரீ** | | |
| **लसत्** | = | விளங்குகின்ற, |
| **லஸத்** | | |
| **गण्डभाग:** | = | கன்னப்பிரதேசங்களை உடையவரும், |
| **க³ண்ட³பா⁴க³:** | | |
| **कटौ** | = | இடுப்பில், |
| **கடௌ** | | |
| **पीतवास:** | = | பொன்னிறமான ஆடையை உடையவரும், |
| **பீதவாஸ:** | | |
| **करे** | = | கையில், |
| **கரே** | | |
| **चारुशक्ति:** | = | அழகிய சக்தி என்ற ஆயுதத்தைத் தாங்கிய |
| **சாருமக்தி:** | | வருமான, |
| **पुरारे:** | = | த்ரிபுரர்களை அழித்த சிவபெருமானின், |
| **புராரே:** | | |
| **तनूज:** | = | குமாரன், |
| **தனூஜ:** | | |
| **मम** | = | என்னுடைய, |
| **மம** | | |
| **पुरस्तात्** | = | முன்னிலையில், |
| **புரஸ்தாத்** | | |
| **आस्तां** | = | இருக்கட்டும். |
| **ஆஸ்தாம்** | | |

முன் சுலோகங்கள் பாதத்திலிருந்து ஆரம்பித்து சிரஸு வரையில் திருமுருகனின் திருஉருவத்தை வர்ணித்தன. இங்கு அவரது பீஷணமாயும் ரமணீயமாயுமுள்ள வடிவம் சித்தரித்துக்காட்டப்பட்டுள்ளது. முருகன் ஜ்வலிக்கின்ற ரத்னங்கள் பதித்த தோள்வளைகளையணிந்துகொண்டிருக்கின்ருர். நல்ல முத்துமாலைகள் அவரது மேனியை வசீகரமுள்ளதாகச் செய்கின்றன. அவரது காதுகளில் விளங்கும் குண்டலங்களின் ஒளி கன்னங்களில் பரவி அவரது முகத்தை மிகவும் பொலிவு பெறச் செய்கின்றன. அவருடைய இடையைப் பொன்னிறமுடைய ஆடை அலங்கரிக்கின்றது. இவ்வாறு குமரக்கடவுளின் திருஉருவம் பக்தர்களைப் பரவசப்படுத்துகின்றதாக விளங்குகின்றது. ஆயினும் அவரது கரத்தில் தோன்றும் சக்தி என்ற ஆயுதம் மிகுந்த அச்சத்தை உண்டுபண்ணுகின்றது. இவ்வாறுன மூர்த்தியை த்யானிப்பதால் ஸகல சத்ரு பயமும் நீங்கி நன்மை பெறலாம். **(17)**

**(அவதாரிகை)** தாய் தந்தையருடன் சேர்ந்திருக்கும் (ஸோமா ஸ்கந்த மூர்த்தி) குழந்தையாக வர்ணிக்கிறார்:

**इहायाहि वत्सेति हस्तान्प्रसार्या**
**ह्वयत्यादरात्छंकरे मातुरङ्कात् ।**
**समुत्पत्य तातं श्रयन्तं कुमारं**
**हराश्लिष्टगात्रं भजे बालमूर्तिम् ॥ १८ ॥**

**இஹாயாஹி வத்ஸேதி ஹஸ்தான் ப்ரஸார்யா -**
**ஹ்வயத்யாத³ராச்ச²ங்கரே மாதுரங்காத் ।**
**ஸமுத்பத்ய தாதம் ஶ்ரயந்தம் குமாரம்**
**ஹராஶ்லிஷ்டகா³த்ரம் ப⁴ஜே பா³லமூர்திம் ॥ 18 ॥**

| | | |
|---|---|---|
| **वत्स** **வத்ஸ** | = | குழந்தாய்! |
| **इह** **இஹ** | = | இங்கு, |
| **आयाहि** **ஆயாஹி** | = | வா, |
| **इति** **இதி** | = | என்று, |
| **हस्तान्** **ஹஸ்தான்** | = | கைகளை, |
| **प्रसार्या** **ப்ரஸார்யா** | = | நீட்டி, |
| **शङ्करे आदरात् आह्वयति** **ஶங்கரே ஆத³ராத் ஆஹ்வயதி** | = | சிவபெருமான் ஆவலுடன் அழைக்கும்பொழுது, |
| **मातु:** **மாது:** | = | தாயினுடைய, |
| **अङ्कात्** **அங்காத்** | = | மடியிலிருந்து, |
| **समुत्पत्य** **ஸமுத்பத்ய** | = | தாவி, |
| **तातं** **தாதம்** | = | தந்தையை, |
| **श्रयन्तं** **ஶ்ரயந்தம்** | = | அடைகின்றவரும், |
| **हराश्लिष्टगात्रं** | = | பரமேச்வரனால் அணைத்துக்கொள்ளப்பட்ட |

**ஹராஶ்லிஷ்டகா³த்ரம்** தேஹத்தையுடையவரும்,

**बालमूर्तिम्** = குழந்தை வடிவமுள்ளவருமான,

**பா³லமூர்திம்**

**कुमारं** = குமரக்கடவுளை,

**குமாரம்**

**भजे** = துதிக்கின்றேன்.

**ப⁴ஜே**

குமரக்கடவுள் குழந்தையின் வடிவத்துடன் கூடியவராய்த் தன் பெற்றோர்களான பார்வதீ பரமேச்வரர்களின் மனதுகளை மகிழ்விக்கின்றார். தனது தாயின் மடியில் விளையாடும் பாலனைத் தந்தை அன்புடன் "இங்கு வா" என அழைக்க அதுவும் அகமகிழ்வுடன் தாவித் தந்தையை அடைகின்றது. குழந்தையும் தெய்வமும் கொண்டாடுமிடத்தென்பர் சான்றோர். இங்கு குழந்தை ரூபத்துடன் விளையாடும் இத்தெய்வம் தன்னைக் கொண்டாடும் பெற்றோர் மனதைக் கவர்வதில் என்ன ஆச்சர்யம்? குழந்தை ரூபத்துடன் விளங்கும் குமரக்கடவுள் தன்னிடம் வந்தவுடன் தந்தையாகிய சிவபெருமானும் அவரை இறுகத்தழுவி மகிழ்ச்சி பெறுகின்றார். பிள்ளையின் ஸ்பரிசத்தைக்காட்டிலும் அதிக ஸுகத்தைத்தருவது இவ்வுலகில் வேறு ஒன்றுமே இல்லை. இவ்வாறு உலகத்தின் தாய் தந்தையரான பார்வதீ பரமேச்வரர்களுக்கே ஆனந்தத்தைத் தரும் அக்குழந்தைக் கடவுளை நாம் பேணுவோமாகில் அளவற்ற ஸுகத்தைப் பெறலாம். அன்புடன் அழைத்த தந்தையிடம் தாவிவந்தது போல நாமும் பக்தியுடன் அழைத்தால் நம்மிடமும் வந்து ஆனந்தம் தருவான். **(18)**

**(அவதாரிகை)** குமரனின் நாமாக்களைச்சொல்லி அவர் பெருமைகளைக் காட்டுகிறார்: -

**कुमारेशसुनो गुह स्कन्द सेना**
**पते शक्तिपाणे मयूराधिरूढ ।**
**पुलिन्दात्मजाकान्त भक्तार्तिहारिन्**
**प्रभो तारकारे सदा रक्ष मां त्वम् ॥ १९ ॥**

**குமாரேஶஸுனோ கு³ஹ ஸ்கந்த³ ஸேனா**
**பதே ஶக்திபாணே மயூராதி⁴ரூட⁴ ।**
**புலிந்தா³த்மஜாகாந்த ப⁴க்தார்திஹாரின்**
**ப்ரபோ⁴ தாரகாரே ஸதா³ ரக்ஷ மாம் த்வம் ॥ 19 ॥**

**कुमार** = குமரா!

**குமார**

**ईशसुनो** = பரமேச்வரருடைய புதல்வனே,

ஈஶஸூனே

गुह = குஹனே!

கு³ஹ

स्कन्द = ஸ்கந்தனே!

ஸ்கந்த³

सेनापते = சேனைத்தலைவா!

ஸேனாபதே

शक्तिपाणे = சக்தி என்ற ஆயுதந்தாங்கியவனே!

ஶக்திபாணே

मयूराधिरूढ = மயில்மீது ஏறியவனே!

மயூராதி⁴ரூட⁴

पुलिन्दात्मजाकान्त = வேடுவ குமாரியின் காதலனே!

புலிந்தா³த்மஜாகாந்த

भक्तार्ति = பக்தர்களின் துன்பங்களை,

ப⁴க்தார்தி

हारिन् = போக்குகின்றவனே!

ஹாரின்

प्रभो = வல்லவனே,

ப்ரபோ⁴

तारकारे = தாரகனை ஸம்ஹரித்தவனே,

தாரகாரே

त्वम् = நீ,

த்வம்

मां = என்னை,

மாம்

सदा = எப்பொழுதும்,

ஸதா³

रक्ष = காப்பாற்று.

ரக்ஷ

குமரக்கடவுள் அன்புடன் அழைப்பவர்களிடம் விரைந்து சென்று பரிவுகாட்டுகிறுர். ஆதலால் ஸ்ரீ பகவத்பாதர் அவர்களும் அவரைப்பல பெயர்களால் அழைத்துத்தன்னைக் காக்கும்படி வேண்டுகின்றுர். இங்கு குமார ஈசஸூநோ என்று முருகன் கூறப்பட்டிருக்கின்றுன். கண்ணன் :

**कारणगुणाः कार्ये संक्रामन्ति**

**காரணகு³ணாः கார்யே ஸங்க்ராமந்தி**

என்ற ஓர் நியாயமுண்டு. அதாவது காரணத்தின் குணமானது கார்யத்தையும் அடையும். அதுபோலவே காரணமாகிய ஈச்வரனிடம் தோன்றிய குமரக்கடவுள் அவனுடைய குணமாகிய காக்கும் சக்தியையும் பெற்று விளங்குகின்றார். குஹ, ஸ்கந்த, ஸேநாபதே என்ற சொற்கள் அவருடைய சக்திகளைக்காட்டுகின்றன. அவர் தேவர்களின் சேனைக்கும் தலைமை தாங்கும் சக்தி வாய்ந்தவர். அவரது சக்தியைத் தாங்கும் வல்லமை பெற்றவர் யாருமிலர். அவரைக்காண்பதும் அரிது. அவர் தன்னுடைய கையில் சக்தியை ஏந்தி மயில்மீது அமர்ந்து பக்தர்களைப் பலவித ஆபத்துக்களிலிருந்தும் காக்கக்காத்துக் கொண்டிருக்கிறார். தேவர்களை ரக்ஷிப்பதற்காகத் தாரகன் என்ற அரக்கனையும் அழித்திருக்கின்றார். வள்ளிதேவியின் ரமணனான முருகப்பெருமான் நம்மைக் காப்பாராக. **(19)**

**(அவதாரிகை)** மூன்று சுலோகங்களால் அந்த்யகாலத்தில் தர்சனம் கொடுத்துக் காக்கவேண்டுகிறார்: -

**प्रशान्तेन्द्रिये नष्टसंज्ञे विचेष्टे**
**कफोद्गारिवक्त्रे भयोत्कम्पिगात्रे ।**
**प्रयाणोन्मुखे मय्यनाथे तदानीं**
**द्रुतं मे दयालो भवाग्रे गुह त्वम् ॥ २० ॥**

**ப்ரஶாந்தேந்த்³ரியே நஷ்டஸஞ்ஜ்ஞே விசேஷ்டே**
**கபோ²த்³கா³ரிவக்த்ரே ப⁴யோத்கம்பிகா³த்ரே ।**
**ப்ரயாணோன்முகே² மய்யநாதே² ததா³னீம்**
**த்³ருதம் மே த³யாலோ ப⁴வாக்³ரே கு³ஹ த்வம் ॥20॥**

| | | |
|---|---|---|
| **दयालो** த³யாலோ | = | தயவு காட்டும் தன்மை வாய்ந்தவனே, |
| **गुह** கு³ஹ | = | குஹனே, |
| **प्रशान्तेन्द्रिये** ப்ரஶாந்தேந்த்³ரியே | = | ஐம்புலன்களும் ஒடுங்கியவனையும், |
| **नष्टसंज्ञे** நஷ்டஸஞ்ஜ்ஞே | = | நினைவிழந்தவனையும், |
| **विचेष्टे** விசேஷ்டே | = | அசைவற்றவனையும், |
| **कफोद्गारिवक्त्रे** கபோ²த்³கா³ரிவக்த்ரே | = | வாயிலிருந்து கபத்தைக் கக்கிக்கொண்டிருகின்ற வனையும், |
| **भयोत्कम्पिगात्रे** ப⁴யோத்கம்பிகா³த்ரே | = | பயத்தால் நடுங்குகின்ற உடலை உடையவனையும், |
| **अनाथे मयि** | = | காப்பவனற்றவனும் ஆன நான், |

| | | |
|---|---|---|
| अनाथे मयि<br>அநாதே² மயி | | |
| प्रयाणोन्मुखे<br>ப்ரயாணோன்முகே² | = | இவ்வுலகிலிருந்து புறப்படத்தயாராக இருக்கும் பொழுது, |
| तदानीं<br>ததா³னீம் | = | அச்சமயத்தில், |
| त्वम्<br>த்வம் | = | நீ, |
| द्रुतं<br>த்³ருதம் | = | விரைவாக, |
| मे<br>மே | = | என், |
| अग्रे<br>அக்³ரே | = | முன்னிலையில், |
| भव<br>ப⁴வ | = | இருப்பாயாக. |

முன் சலோகத்தில் ஆபத்து நேரிடும்பொழுது திருமுருகன் தன்னைக்காக்க வேண்டுமென்று ஸ்ரீபகவத்பாதர் அவர்கள் பிரார்த்தனை செய்தார். இங்கு அந்த ஆபத்து எத்தகையது என்பதை அவர் நன்கு காட்டுகின்றார். ஒருவனுக்கு மரணம் சம்பவிக்கும் பொழுது அவனை யார் காக்கமுடியும்?

**कः कं शक्तो रक्षितुं मृत्युकाले?**

**க: கம் ஶக்தோ ரக்ஷிதும் ம்ருத்யுகாலே?**

அப்பொழுது அவனது ஐம்புலன்களும் ஒடுங்கிவிடுகின்றன. பிரக்ஞை போய்விடுகின்றது. ஆதலால் அவன் எதையும் அறிந்து கொள்ளமுடியாத நிலையை அடைகிறான். அவன் எங்கும் அசையமுடியாமல் வீழ்ந்து கிடக்கிறான். அவனுடைய முகத்திலிருந்து கபம் பெருகிக்கொண்டிருக்கின்றது. உடல் நடுங்குகின்றது. இவ்வாறாக அவன் நாதனின்றி அல்லல் படும்பொழுது முருகக்கடவுள் தான் அவனைக்காக்க இயலும். ஆதலால் யான் அந்நிலையையடையும்பொழுது முருகப் பெருமான் என்னைக்காக்க என் கண்முன் விரைவில் எழுந்தருள வேண்டும் என்று இரைஞ்சுகின்றார் ஸ்ரீ பகவத் பாத ஸ்வாமிகள். ஆதலால் நாமும் முருகனைத் துதித்தால் நமக்கு இவ்வாறான யமபாதை ஏற்படாது என்பது விளங்குகின்றது. **(20)**

**कृतान्तस्य दूतेषु चण्डेषु कोपा-**
**दह च्छिन्द्धि भिन्द्धीति मां तर्जयत्सु ।**
**मयूरं समारुह्य मा भैरिति त्वं**
**पुरः शक्तिपाणिर्ममायाहि शीघ्रम् ॥ २१ ॥**

**க்ருதாந்தஸ்ய தூ³தேஷு சண்டே³ஷு கோபாத்³**
**த³ஹ ச்சி²ந்த்³தி⁴ பி⁴ந்த்³தீ⁴தி மாம் தர்ஜயத்ஸு ।**
**மயூரம் ஸமாருஹ்ய மா பை⁴ரிதி த்வம்**
**புர: ஶக்திபாணிர் மமாயாஹி ஶீக்⁴ரம் ॥ 21 ॥**

| | | |
|---|---|---|
| **चण्डेषु** <br> **சண்டே³ஷு** | = | கொடியவர்களான, |
| **कृतान्तस्य** <br> **க்ருதாந்தஸ்ய** | = | யமனுடைய, |
| **दूतेषु** <br> **தூ³தேஷு** | = | தூதர்கள், |
| **कोपात्** <br> **கோபாத்** | = | கோபத்தினுல், |
| **दह** <br> **த³ஹ** | = | கொளுத்து, |
| **छिन्द्धि** <br> **சி²ந்த்³தி⁴** | = | வெட்டு, |
| **भिन्धि** <br> **பி⁴ந்தி⁴** | = | பிள, |
| **इति** <br> **இதி** | = | என்று, |
| **मां** <br> **மாம்** | = | என்ஐன, |
| **तर्जयत्सु** <br> **தர்ஜயத்ஸு** | = | அதட்டும் பொழுது, |
| **त्वं** <br> **த்வம்** | = | நீ, |
| **मयूरं समारुह्य** <br> **மயூரம் ஸமாருஹ்ய** | = | மயில்மீது ஏறிக்கொண்டு, |
| **शक्तिपाणि:** <br> **ஶக்திபாணி:** | = | சக்தியைக் கையில் ஏந்தியவனுக, |
| **मा भै:** <br> **மா பை⁴** | = | பயப்படாதே, |
| **इति** <br> **இதி** | = | என்று, |
| **मम** | = | என்னுடைய, |

**மம**

**पुरः** = முன்னிலையில்,

**புர:**

**शीघ्रम्** = விரைவாக,

**ஶீக்4ரம்**

**आयाहि** = வருவாயாக.

**ஆயாஹி**

உயிர் உடலைவிட்டு நீங்கும் சமயத்தில் பயங்கரமான தோற்றமுள்ள யமபடர்கள் பலவிதமான ஆயுதங்களைத் தாங்கியவர்களாய் 'கொளுத்து, வெட்டு, பிள' என்று கூச்சலிட்டுக்கொண்டு ஜீவராசிகளைப் பயமுறுத்துகின்றனர். அச்சமயத்தில் யாரும் அவர்களை யமபடர்களின் பயத்தினின்று விடுவிக்கமுடியாது. முருகப்பெருமான் தான் தன் கையில் சக்தி என்னும் ஆயுதத்தை எடுத்துக்கொண்டு தன்னுடைய பக்தர்களைக் காக்கின்றான். ஆதலால் ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் இவ்விதமான ஆபத்துக் காலத்தில் தன்னைக்காப்பாற்ற வேண்டுமெனக் குஹனைப் பிரார்த்திக்கின்றார். **(21)**

**प्रणम्यासकृत्पादयोस्ते पतित्वा**
**प्रसाद्य प्रभो प्रार्थयेऽनेकवारम् ।**
**न वक्तुं क्षमोऽहं तदानीं कृपाब्धे**
**न कार्यान्तकाले मनागप्युपेक्षा ॥ २२ ॥**

**ப்ரணம்யாஸக்ருத் பாத3யோஸ்தே பதித்வா**
**ப்ரஸாத்3ய ப்ரபோ4 ப்ரார்த2யே(அ)னேகவாரம் ।**
**ந வக்தும் க்ஷமோ(அ)ஹம் ததா3னீம் க்ருபாப்3தே4**
**ந கார்யாந்தகாலே மனாக3ப்யுபேக்ஷா ॥ 22 ॥**

**कृपाब्धे** = கருணைக் கடலே!

**க்ருபாப்3தே4**

**प्रभो** = ப்ரபுவே!

**ப்ரபோ4**

**असकृत्** = அடிக்கடி,

**அஸக்ருத்**

**प्रणम्य** = வணங்கி,

**ப்ரணம்ய**

**ते** = உம்முடைய,

**தே**

**पादयो** = பாதங்களில்,

**பாத³யோ**
**पतित्वा** = விழுந்து,
**பதித்வா**
**प्रसाद्य** = மகிழ்வித்து,
**ப்ரஸாத்³ய**
**अनेकवारं** = பன்முறை,
**அனேகவாரம்**
**प्रार्थये** = வேண்டுகின்றேன்,
**ப்ரார்த²யே**
**तदानीं** = அச்சமயத்தில்,
**ததா³னீம்**
**अहं** = நான்,
**அஹம்**
**वक्तुं** = பேசுவதற்கு,
**வக்தும்**
**न क्षम:** = சக்தியற்றவனுவேன்,
**ந க்ஷம:**
**अन्तकाले** = முடிவு காலத்தில்,
**அந்தகாலே**
**मनागपि** = சிறிதுகூட,
**மநாக³பி**
**उपेक्षा** = அசட்டை,
**உபேக்ஷா**
**न कार्या** = செய்யத்தக்கதல்ல.
**ந கார்யா**

"மரண காலத்தில் புலன்கள் அனைத்தும் ஒடுங்கும் பொழுது கடவுளை த்யானம் செய்வதும் பிரார்த்திப்பதும் இயலாத கார்யம். ஆகையால் நான் இப்பொழுதே உன் னுடைய பாதங்களில் பல தடவை விழுந்து உன்னை மகிழச்செய்து பிரார்த்தனை செய்கின்றேன். கடைசி காலத்தில் என்னைக்கைவிடாதே" என்று பகவத்பாதர் பக வானை வேண்டுகின்றுர். அதனுல் ஏதாவது ஒருசமயம் தன்னைப்பணிந்து துதித்த பக்த ர்களை அந்தியகாலத்தில் முருகப்பெருமான் காக்கின்றுர் என்று விளங்குகின்றது. **(22)**

**(அவதாரிகை)** இரு சுலோகங்களால் மனத்துன்பத்தை நீக்க வேண்டுகிறுர்: -

**सहस्राण्डभोक्ता त्वया शूरनामा हतस्तारक: सिंहवक्लश्च दैत्य: ।**
**ममान्तर्हृदिस्थं मन:क्लेशमेकं न हंसि प्रभो किं करोमि क यामि ॥ २३ ॥**

**ஸஹஸ்ராண்ட³போ⁴க்தா த்வயா ஶூரநாமா**
**ஹதஸ்தாரக: ஸிம்ஹவக்லஶ்ச தை³த்ய: ।**
**மமாந்தர்ஹ்ருதி³ஸ்த²ம் மன:க்லேஶமேகம்**
**ந ஹம்ஸி ப்ரபோ⁴ கிம் கரோமி க யாமி ॥ 23 ॥**

**प्रभो** = ஏ ப்ரபுவே!
**ப்ரபோ⁴**
**सहस्राण्डभोक्ता** = ஆயிரம் அண்டங்களையும் ஆண்ட,
**ஸஹஸ்ராண்ட³போ⁴க்தா**
**शूरनामा** = சூரபத்மன் என்று பெயர்கொண்ட அஸுரன்,
**ஶூரநாமா**
**त्वया** = உம்மால்,
**த்வயா**
**हत** = கொல்லப்பட்டான்,
**ஹத**
**तारक:** = தாரகன் என்பவனும்,
**தாரக:**
**सिंहवक्लश्च दैत्य: च** = சிம்மத்தின் முகத்தையுடைய அரக்கனும்
**ஸிம்ஹவக்லஶ்ச தை³த்ய: ச** கொல்லப்பட்டான்,
**मम** = என்னுடைய,
**மம**
**अन्तर्हृदिस्थं** = மனதினுள் நிலைத்திருக்கும்,
**அந்தர்ஹ்ருதி³ஸ்த²ம்**
**मन:क्लेशं न एकं** = கவலை என்ற ஒன்றை,
**மன:க்லேஶம் ந ஏகம்**
**न हंसि** = கொல்லாவிடில்,
**ந ஹம்ஸி**
**किं करोमि** = என்னசெய்வேன்?
**கிம் கரோமி**
**क** = எங்கு,
**க**
**यामि** = செல்வேன்?
**யாமி**

முருகக்கடவுள் மிகுந்த சக்தி வாய்ந்தவர். ஆயிரம் அண்டங்களையும் ஆண்ட சூரபத்மன் என்ற அஸுரனை அழித்தவர். அதேபோல் அவர் தாரகன் என்ற அரக்கனையும் சிம்மமுகன் என்னும் மற்றுமோர் அஸுரனையும் கொன்று உலகில் உள்ள அனைவரது துன்பங்களையும் நீக்கி இருக்கின்றார். அவரைப்பணிவதால் நம் துன்பங்க

ளும் நீங்கும். அவரன்றி ஒருவராலும் கவலைகளைத் தீர்க்க முடியாது. அவர் நம்மீது கருணை வைக்காவிடில் நாம் என்ன செய்ய முடியும்? எங்கு செல்லமுடியும்? **(23)**

**अहं सर्वदा दुःखभारावसन्नो**
**भवान्दीनबन्धुस्त्वदन्यं न याचे ।**
**भवद्भक्तिरोधं सदा क्लृप्तबाधं**
**ममाधिं द्रुतं नाशयोमासुत त्वम् ॥ २४ ॥**

**அஹம் ஸர்வதா³ து³:க²பா⁴ராவஸன்னோ**
**ப⁴வாந் தீ³னப³ந்து⁴ஸ்த்வத³ன்யம் ந யாசே ।**
**ப⁴வத்³ப⁴க்திரோத⁴ம் ஸதா³ க்ல்ருப்தபா³த⁴ம்**
**மமாதி⁴ம் த்³ருதம் நாஶயோமாஸுத த்வம் ॥ 24 ॥**

| | | |
|---|---|---|
| **उमासुत** उமாஸுத | = | உமையின் புத்ரனே! |
| **अहं** அஹம் | = | நான், |
| **सर्वदा** ஸர்வதா³ | = | எப்பொழுதும், |
| **दुःखभारावसन्नः** து³:க²பா⁴ராவஸன்னः | = | துன்பச்சுமையால் தவிக்கின்றேன், |
| **भवान्** ப⁴வான் | = | நீர், |
| **दीनबन्धु** தீ³னப³ந்து⁴ | = | ஏழைகளுக்கு உதவி செய்கின்றவர், |
| **त्वदन्यं** த்வத³ன்யம் | = | உம்மைத்தவிர வேறு ஒருவரையும், |
| **न याचे** ந யாசே | = | நான் வேண்டவில்லை, |
| **भवद्भक्तिरोधं** ப⁴வத்³ப⁴க்திரோத⁴ம் | = | உம்மிடம் பக்தி வைப்பதற்குத் தடைசெய்கின்றதும், |
| **सदा** ஸதா³ | = | எப்பொழுதும், |
| **क्लृप्तबाधं** க்ல்ருப்தபா³த⁴ம் | = | துன்பத்தையுண்டுபண்ணுகின்றதுமான, |
| **मम** மம | = | என்னுடைய, |
| **आधिं** | = | மனோவ்யாதியை, |

**आदिम्**

**द्रुतं** = சீக்ரமாக,

**த்³ருதம்**

**त्वम्** = நீர்,

**த்வம்**

**नाशय** = அழிப்பீராக.

**நாஶய**

தாயைப்போல் சேய் என்று சொல்வார்கள். உமையின் புதல்வனுன ஆறுமுக க்கடவுளும் தன் தாயின் குணங்களைப் பெற்று விளங்குகின்றுன். உமை சிவனைத் தன் கணவனுக அடையும்பொருட்டுத் தவம்செய்ய விரும்பினுள். ஆனுல் அவள் தாய் **उ உ** ஏ குழந்தாய்! **मा மா** வேண்டாம் என்று சொல்லி அவள் தவம் செய்வதைத் தடுத்தாள். அதனுல் அவளுக்கு உமை என்ற பெயர் வழங்கலாயிற்று. ஆயினும் அவள் இடையூறுகளைப் பாராட்டாமல் தவம் செய்து சிவபெருமானையே பதியாக அடைந்தாள். அவளது குமாரனும் பக்தனுக்கு ஏற்படும் இடையூறுகளைக் களைவான் என்பது **उमासुत உமாஸுத** என்ற சொல்லால் விளங்குகின்றது. அதனுல் அவரை அண்டுபவர்களின் இடைஞ்சல்களைக் களைந்து அம்முருகக்கடவுள் அவர்களிடம் பக்தியை உண்டுபண்ணுகிறுர். அதனுல் பக்தனுடைய துன்பங்களனைத்தும் நீங்குகின் றன. அவரைத் தவிர வேறு யாரை சரண் புகுவேன்? யாரை வேண்டுவேன்? **(24)**

**(அவதாரிகை)** திருச்செந்தூரில் பக்தருக்கு பக்தருக்கு அருளுகின்ற பன்னீர் இலை விபூதியின் பெருமையைக் கூறுகிறுர்: -

**अपस्मार कुष्ठक्षयार्शःप्रमेह-**
**ज्वरोन्मादगुल्मादिरोगा महान्तः ।**
**पिशाचाश्च सर्वे भवत्पत्रभूतिं**
**विलोक्य क्षणात्तारकारे द्रवन्ते ॥ २५ ॥**

**அபஸ்மார குஷ்ட²க்ஷயார்ஶ:ப்ரமேஹ-**
**ஜ்வரோன்மாத³கு³ல்மாதி³ரோகா³ மஹாந்த: ।**
**பிஶாசாஶ்ச ஸர்வே ப⁴வத்பத்ரபூ⁴திம்**
**விலோக்ய க்ஷணாத் தாரகாரே த்³ரவந்தே ॥ 25 ॥**

**तारकारे** = தாரகன் என்ற அரக்கனைக் கொன்றவனே!

**தாரகாரே**

**महान्तः** = பெரிய,

**மஹாந்த:**

**अपस्मार** = அபஸ்மாரம்,

**அபஸ்மார**

**कुष्ठ** = குஷ்டம்,
**குஷ்ட$^{2}$**

**क्षय** = க்ஷயம்,
**க்ஷய**

**अर्श:** = மூலம்,
**அர்ஶ:**

**प्रमेह** = மேஹம்,
**ப்ரமேஹ**

**ज्वर** = ஜ்வரம்,
**ஜ்வர**

**उन्माद** = பைத்தியம்,
**உன்மாத$^{3}$**

**गुल्मादि** = குன்மம் இது முதலான,
**கு$^{3}$ல்மாதி$^{3}$**

**रोगा:** = நோய்களும்,
**ரோகா$^{3}$:**

**सर्वे पिशाचा: च** = எல்லாப்பிசாசுகளும்,
**ஸர்வே பிஶாசா: ச**

**भवत्** = உம்முடைய,
**ப$^{4}$வத்**

**पत्रभूतिं** = இலையில் வைக்கப்பட்டுள்ள விபூதியை,
**பத்ரபூ$^{4}$திம்**

**विलोक्य** = பார்த்து,
**விலோக்ய**

**क्षणात्** = ஒரே விநாடியில்,
**க்ஷணாத்**

**द्रवन्ते** = ஓடிவிடுகின்றன.
**த்$^{3}$ரவந்தே**

முருகப்பெருமானின் இலை விபூதியைக் கண்ட உடனேயே ஸகல ரோகங்களும் பிசாசங்களும் விலகுகின்றன. அவ்வாறு இருக்க இவ்விபூதியைத் தரித்துக் கொள்வதால் எல்லா ஆபத்துக்களும் விலகுமென்பதைச் சொல்லவாவேண்டும்? தவிரவும் ஸாதாரணமாக விபூதியின் மஹிமையோ எல்லோருக்கும் தெரிந்ததே. அதிலும் பன்னீரிலையில் அடங்கிய முருகப்பெருமானின் பிரஸாதமான விபூதியின் மஹிமையை எல்லோரும் அனுபவித்திருப்பார்கள். இதன் மஹிமையைப் பல பெரியோர்களின் சரித்ரங்களும் நன்கு புலப்படுத்துகின்றன. மேலும் முருகக்கடவுளின் கருணையால் இலை விபூதியை ஓர் நிதியாகப்பெற்ற பக்தரத்னங்களான த்ரிஸ்வதந்த்ர முனீஸ்வரர்களின் பல அற்புத வைபவங்களும், விபூதியும் கையுமாக

அம்முனிவரது வடிவமாய்த் தோன்றி பக்த ஜனங்களுக்குக் கருணைபுரியும் முருகப் பெருமானின் பல ஆச்சரியமான செயல்களும் கணக்கில் அடங்கா. **(25)**

(**அவதாரிகை**) ஆண்டவனிடம் நம் ஒவ்வொரு அவயவமும் ஈடுபடும் விதத்தைக் காட்டுகிறார்: -

**दृशि स्कन्दमूर्तिः श्रुतौ स्कन्दकीर्ति-**
**मुखे मे पवित्रं सदा तच्चरित्रम् ।**
**करे तस्य कृत्यं वपुस्तस्य भृत्यं**
**गुहे सन्तु लीना ममाशेषभावाः ॥ २६ ॥**

**த்³ருஶி ஸ்கந்த³மூர்திః ஶ்ருதௌ ஸ்கந்த³கீர்தி-**
**முகே² மே பவித்ரம் ஸதா³ தச்சரித்ரம் ।**
**கரே தஸ்ய க்ருத்யம் வபுஸ்தஸ்ய ப்⁴ருத்யம்**
**கு³ஹே ஸந்து லீனா மமாஶேஷபா⁴வாః ॥ 26 ॥**

| | | |
|---|---|---|
| **मे** மே | = | என்னுடைய, |
| **दृशि** த்³ருஶி | = | கண்ணின்முன், |
| **स्कन्दमूर्तिः** ஸ்கந்த³மூர்திః | = | முருகப்பெருமானுடைய திருவுருவம் (தோன்றட்டும்), |
| **श्रुतौ** ஶ்ருதௌ | = | காதில், |
| **स्कन्दकीर्तिः** ஸ்கந்த³கீர்திః | = | முருகனுடைய புகழுரை (விழட்டும்), |
| **मुखे** முகே² | = | வாயில், |
| **पवित्रं** பவித்ரம் | = | புனிதமான, |
| **तच्चरित्रम्** தச்சரித்ரம் | = | அவனது கதையும், |
| **करे** கரே | = | கையில், |
| **तस्य कृत्यं** தஸ்ய க்ருத்யம் | = | அவனுக்குச் செய்யும் கைங்கர்யமும் இருக்கட்டும், |
| **वपुः** வபுః | = | உடல், |

| | | |
|---|---|---|
| **तस्य भृत्यं**<br>**தஸ்ய ப்⁴ருத்யம்** | = | அவனுடைய ஏவலாளாக இருக்கட்டும் (இவ்வாறு), |
| **मम**<br>**மம** | = | என்னுடைய, |
| **अशेषभावा:**<br>**அஶேஷபா⁴வா:** | = | எல்லாச் செய்கைகளும், |
| **गुहे**<br>**கு³ஹே** | = | குஹனிடம், |
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **लीना:**<br>**லீனா:** | = | ஈடுபட்டவைகளாக, |
| **सन्तु**<br>**ஸந்து** | = | இருக்கட்டும். |

நம் உடலில் உள்ள உள்ள ஒவ்வொரு அவயவத்திற்கும் ஒவ்வொரு சக்தி இருக்கிறது. கண்ணுக்குப் பார்க்கும் சக்தியும் காதுக்குக்கேட்கும் சக்தியும், வாய்க்குப் பேசும் சக்தியும், கைக்கு வேலை செய்யும் திறனும் இருக்கிறது. இது போல் மற்ற அவயவங்களுக்கும் விசேஷ சக்தி இருக்கிறது. காலுக்கு நடக்கும் சக்தி, தலைக்கு வணங்கும் சக்தி. நாம் எல்லோரும் ஸாதாரணமாக இந்த அவயவங்களை உலக விஷயங்களில் உபயோகப்படுத்துகிறோம். உபயோகம் இல்லாததும், பார்க்கத்தகாதது மான உருவங்களைப் பார்க்கிறோம். கேட்கத்தகாதவைகளைக் கேட்கிறோம். சொல்லத் தகாதவைகளைச் சொல்கிறோம். செய்யத்தகாதவைகளைச் செய்கிறோம். எண்ணத் தகாதவைகளை எண்ணுகிறோம். இதனால் ஸம்ஸாரச்சுழலில் சிக்கித் தவிக்கிறோம். இந்த சுலோகத்தில் பகவத்பாதர் நம் ஒவ்வொரு அவயவங்களையும் அதாவது உடல் முழுவதையும் முருகனிடத்திலேயே எப்பொழுதும் ஈடுபடுத்தவேண்டுமென்று உபதேசிக்கிறார். கண் கோவில்களில் விளங்கும் ஸ்கந்தரின் உருவத்தையே எப்பொழுதும் பார்க்கவேண்டும். அவரின் புகழ்மிக்க சரித்திரங்களை அடியார்கள் சொல்வதைக் காதால் கேட்க வேண்டும். வாயால் அவர் கதைகளைச் சொல்ல வேண்டும். கையால் அவருக்கு பூஜை முதலிய கார்யங்களைச் செய்ய வேண்டும். காலால் அவர் திருக்கோயிலுக்கு நடந்துசெல்ல வேண்டும். தலையால் அவரை வணங்கவேண்டும். மனதால் அவரையே நினைக்க வேண்டும். இவ்வாறு நம் உடலை அவரிடம் ஈடுபடுத்தி ஆண்டவனுக்காகவே ஒவ்வொரு காரியத்தையும் செய்து வர வேண்டும். உடலைப் பெற்ற பயன் இதுதான். **(26)**

**(அவதாரிகை)** முருகன் கடையர்களையும் காக்கும் தெய்வமென கூறுகிறார்: -

**मुनीनामुताहो नृणां भक्तिभाजामभीष्टप्रदा: सन्ति सर्वत्र देवा: ।**
**नृणामन्त्यजानामपि स्वार्थदाने गुहाद्दैवमन्यन्न जाने न जाने ॥ २७ ॥**

**முனீநாமுதாஹோ ந்ருணாம் ப⁴க்திபா⁴ஜா-**
**மபீ⁴ஷ்டப்ரதா³: ஸந்தி ஸர்வத்ர தே³வா: ।**
**ந்ருணாமந்த்யஜாநாமபி ஸ்வார்த²தா³னே**
**கு³ஹாத்³தை³வமன்யன் ன ஜானே ந ஜானே ॥ 27 ॥**

| | | |
|---|---|---|
| **मुनीनां** முனீனாம் | = | முனிவர்களுக்கோ, |
| **उताहो** உதாஹோ | = | அல்லது, |
| **भक्तिभाजां** ப⁴க்திபா⁴ஜாம் | = | பக்தி செய்யும், |
| **नृणां** ந்ருணாம் | = | மனிதர்களுக்கோ, |
| **भक्तिभाजां** ப⁴க்திபா⁴ஜாம் | = | வேண்டிய வரன்களைக் கொடுக்கும், |
| **नृणां** ந்ருணாம் | = | தேவர்கள், |
| **अभीष्टप्रदा:** அபீ⁴ஷ்டப்ரதா³: | = | எல்லா இடங்களிலும், |
| **देवा:** தே³வா: | = | இருக்கிறார்கள், |
| **सर्वत्र** ஸர்வத்ர | = | கீழ் ஜாதியில் பிறந்த, |
| **सन्ति** ஸந்தி | = | மனிதர்களுக்கும்கூட, |
| **स्वार्थदाने** ஸ்வார்த²தா³னே | = | மனோபீஷ்டத்தைக் கொடுப்பதில், |
| **गुहात्** கு³ஹாத் | = | குஹனைத்தவிர, |
| **अन्यत् दैवं** அன்யத் தை³வம் | = | வேறு ஒரு தைவத்தையும், |
| **न जाने** ந ஜானே | = | யான் அறியவில்லை, |
| **न जाने** ந ஜானே | = | யான் அறியவில்லை, |

இங்கு முருகப்பெருமானின் தனிச்சிறப்பு எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றது. உலகில் எவ்வளவோ தேவதைகள் இருக்கின்றனர். ஆனுல் அவர்கள் எல்லோரும் விதிப்படி தவம் செய்கின்றவர்கட்கோ அல்லது பக்தி செய்கின்றவர்கட்கோதான் வேண்டிய வரங்களைக் கொடுப்பார்கள். ஆனுல் கீழ்ஜாதியில் பிறந்து முறைப்படி வழிபட அதிகாரமில்லாதவர்களுக்கும் மனேபீஷ்டங்களைத் கொடுத்துக் காப்பாற்றுபவர் முருகன் ஒருவர்தான். இவ்விஷயத்தில் இவரைப்போல் மற்றேர் தெய்வத்தைக் காண்பது அரிது. **(27)**

(**அவதாரிகை**) தனது பரிவாரங்களும் குஹ ஸேவையில் ஈடுபட வேண்டும் என வேண்டுகிறுர்: -

**कलत्रं सुता बन्धुवर्गः पशुर्वा**
**नरो वाथ नारि गृहे ये मदियाः ।**
**यजन्तो नमन्तः स्तुवन्तो भवन्तं**
**स्मरन्तश्च ते सन्तु सर्वे कुमार ॥ २८ ॥**

**கலத்ரம் ஸுதா ப³ந்து⁴வர்க³: பஶுர்வா**
**நரோ வாத² நாரி க்³ருஹே யே மதி³யா: ।**
**யஜந்தோ நமந்த: ஸ்துவந்தோ ப⁴வந்தம்**
**ஸ்மரந்தஶ்ச தே ஸந்து ஸர்வே குமார ॥ 28 ॥**

**कलत्रं** = மனைவியோ,
**கலத்ரம்**

**सुताः** = பிள்ளைகளோ,
**ஸுதா:**

**बन्धुवर्गः** = உறவினர் கூட்டமோ,
**ப³ந்து⁴வர்க³:**

**वा** = அல்லது,
**வா**

**पशुः** = பசுவோ,
**பஶு:**

**नरो वा** = புருஷனே,
**நரோ வா**

**अथ** = அல்லது,
**அத²**

**नारि** = பெண்ணே,
**நாரி**

**गृहे** = வீட்டில்,

க்³ருஹே

ये मदिया: = என்னைச்சேர்ந்தவர்கள் எவர்களோ,

யே மதீ³யா:

कुमार = குமரக் கடவுளே,

குமார

ते सर्वे = அவர்கள் அனைவரும்,

தே ஸர்வே

भवन्तं = உம்மை,

ப⁴வந்தம்

यजन्त: = பூஜிக்கின்றவர்களாயும்,

யஜந்த:

नमन्त: = வணங்குகின்றவர்களாயும்,

நமந்த:

स्तुवन्त: = ஸ்துதி செய்கின்றவர்களாயும்,

ஸ்துவந்த:

स्मरन्तश्च = ஸ்மரிக்கின்றவர்களாகவும்,

ஸ்மரந்தஶ்ச

सन्तु = இருக்கட்டும்.

ஸந்து

அறியாமை என்ற காரிருளின்கண் தத்தளிக்கும் ஜீவ ராசிகளுக்கு ஆத்மவித்யை என்ற ஓர் திவ்ய தீபத்தைக் காட்டிக் கரையேற்றவே கருணாமூர்த்தியான சிவபெருமான் பூவுலகில் அவதரித்தார். அவரது திருக்குமாரனே குமரக் கடவுள். ஆதலால் இங்கு அவர் முருகக்கடவுளைக் குமாரா என்று அழைக்கின்றார். என் வீட்டில் வஸிக்கும் என்னைச் சேர்ந்த மனைவி, மக்கள், உறவினர், பசுக்கள் மற்றுமுள்ள ஆண், பெண் அனைவரும் எப்பொழுதும் உன்னையே பூஜித்துக்கொண்டும், வணங்கிக்கொண்டும், துதித்துக் கொண்டும், ஸ்மரித்துக்கொண்டும் இருக்கவேண்டுமென அவர் இறைவனைப் பிரார்த்தனை செய்கின்றார். விவாஹம் செய்து கொள்ளாமல் ப்ரஹ்மசர்யாச்ரமத்திலிருந்தே ஸந்யாஸிர்ச்ரமத்தையடைந்த ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இந்த சுலோகத்தில் “என்வீட்டிலுள்ள எனது மனைவி மக்கள்” என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? அவருக்கு வீடு ஏது? மனைவி மக்கள் ஏது? என்று ஸந்தேஹம் ஏற்படலாம். அதற்கு ஸமாதானம் இவ்வாறு: என் பக்தன் வீட்டிலுள்ள மனைவி மக்கள் என்று சொல்லலாம். பக்தன் கிருஹஸ்தனாக இருக்கலாம். மேலும் பரமேசுவரனே லோகாநுக்ரஹத்திற்காக சங்கராசார்ய ரூபமாக அவதரித்திருக்கிறார். இந்த ஸ்தோத்திரம் மூலம் அவர் அடையவேண்டியது ஒன்றும் இல்லை. ஸ்துதி செய்யத்தெரியாத பக்தர்களுக்காகத்தான் அவர் எல்லா ஸ்தோத்திரங்களையும் அருளியுள்ளார். இந்த ஸ்தோத்திரத்தைப் படிக்கும் கிருஹஸ்தனாக உள்ள பக்தன் தன் வீட்டிலுள்ள யாவரும் முருகனைப் பஜிக்க வேண்டுமென பிரார்த்திக்கிறான். தான் மட்டுமில்லாமல் தன்னைச் சேர்ந்தவர் யாவரும் முருகனை வழிபட்டு

நன்மையடையும்படி செய்ய வேண்டியது கிருஹஸ்தனுடைய கடமை என்று தெரிகிறது. இம்மாதிரியான வேறு சுலோகங்களிலும் இதே ஸமாதானத்தைக் கொள்ளலாம். **(28)**

(அவதாரிகை) குஹ பக்தர்களின் உடலுக்கு ஒரு துன்பமும் ஏற்படாதெனக் காட்டுகிருர்: -

**मृगाः पक्षिणो दंशका ये च दुष्टा-**
**स्तथा व्याधयो बाधका ये मदङ्गे ।**
**भवच्छक्तितीक्ष्णाग्रभिन्नाः सुदूरे**
**विनश्यन्तु ते चूर्णितक्रौञ्चशैल ॥ २९ ॥**

**ம்ருகா³: பக்ஷிணோ த³ம்ஶகா யே ச து³ஷ்டா-**
**ஸ்ததா² வ்யாத⁴யோ பா³த⁴கா யே மத³ங்கே³ ।**
**ப⁴வச்ச²க்தி தீக்ஷ்ணக்³ர பி⁴ன்னா: ஸுது³ரே**
**வினஶ்யந்து தே சூர்ணிதக்ரௌஞ்ச்வஶைல ॥ 29 ॥**

**चूर्णितक्रौञ्चशैल** = கிரௌஞ்சமென்ற மலையைப் பொடியாக்கிய குமர!
**சூர்ணிதக்ரௌஞ்ச்வஶைல**

**ये** = மிருகங்களும்,
**யே**

**मृगाः** = பறவைகளும்,
**ம்ருகா³:**

**पक्षिणः** = கொடிய,
**பக்ஷிண:**

**दंशका** = கடிக்கும் ஜந்துக்களும்,
**த³ம்ஶகா**

**तथा** = அது போலவே,
**ததா²**

**मदङ्गे** = என்னுடைய சரீரத்தில்,
**மத³ங்கே³**

**बाधकाः** = துன்பத்தைக் கொடுக்கின்ற,
**பா³த⁴கா:**

**ये** = எந்த,
**யே**

**व्याधयः** = நோய்களும் உள்ளனவோ,
**வ்யாத⁴ய:**

**ते** = அவைகள் அனைத்தும்,

**தே**

**भवच्छक्तितीक्ष्णाग्रभिन्ना:** = உன்னுடைய சக்தியென்ற ஆயுதத்தின் கூர்மை

**ப⁴வச்ச²க்தி தீக்ஷ்ணாக்³ர பி⁴ன்னா:** யான நுனியால் பிளக்கப்பட்டவைகளாக,

**सुदूरे** = வெகுதூரத்தில் சென்று,

**ஸுதூ³ரே**

**विनश्यन्तु** = நாசமடையட்டும்.

**விநஶ்யந்து**

முருகப்பெருமானைத் துதிப்பதால் சகலவிதமான துன்பங்களும் நீங்கும். விஷக்கடிகளால் ஏற்படும் கஷ்டங்களோ அல்லது பலவிதமான நோய்களால் உண்டாகும் துன்பங்களோ முருகனுடைய சக்தியினால் போக்கப்படுகின்றன. அதனால் பக்தர்கள் சுகித்து வாழலாம் என்பது இதனால் நன்கு விளங்குகின்றது. **(29)**

(**அவதாரிகை**) குற்றங்களைப் பொறுத்துக்கொள்ளும்படி வேண்டுகிறார்: -

**जनित्री पिता च स्वपुत्रापराधं**
**सहेते न किं देवसेनाधिनाथ ।**
**अहं चातिबालो भवान् लोकतात:**
**क्षमस्वापराधं समस्तं महेश ॥ ३० ॥**

**ஜனித்ரீ பிதா ச ஸ்வபுத்ராபராத⁴ம்**
**ஸஹேதே ந கிம் தே³வஸேனாதி⁴நாத² ।**
**அஹம் சாதிபா³லோ ப⁴வான் லோகதாத:**
**க்ஷமஸ்வாபராத⁴ம் ஸமஸ்தம் மஹேஶ ॥ 30 ॥**

**जनित्री** = பெற்ற தாயும்,

**ஜனித்ரீ**

**पिता च** = தந்தையும்,

**பிதா ச**

**स्वपुत्रापराधं** = தன் பிள்ளையின் குற்றத்தை,

**ஸ்வபுத்ராபராத⁴ம்**

**सहेते न किं** = பொறுப்பதில்லையா என்ன?

**ஸஹேதே ந கிம்**

**देवसेनाधिनाथ** = தேவர்களுடைய ஸேனைத் தலைவனே!

**தே³வஸேனாதி⁴நாத²**

**महेश** = மிகுத்த சக்திவாய்ந்த முருகப்பெருமானே,

**மஹேஶ**

| | | |
|---|---|---|
| **अहं च**<br>**அஹம் ச** | = | நானும், |
| **अतिबाल:**<br>**அதிபா³ல:** | = | மிகச்சிறுவன், |
| **भवान्**<br>**ப⁴வான்** | = | தாங்கள், |
| **लोकतात:**<br>**லோகதாத:** | = | உலகங்களுக்கெல்லாம் தந்தை, |
| **समस्तं**<br>**ஸமஸ்தம்** | = | எல்லா, |
| **अपराधं**<br>**அபராத⁴ம்** | = | குற்றத்தையும், |
| **क्षमस्व**<br>**க்ஷமஸ்வ** | = | பொறுத்தருள்வீராக. |

முருகக்கடவுள் தான் உலகமனைத்திற்கும் தாய், தந்தையும் அவரே. நாமெல்லோரும் அவரது குழந்தைகள். தாய் தந்தையர் குழந்தைகள் செய்யும் தவறுகளைப் பொருட்படுத்தாது அவர்களைப்பேணிப் போஷிக்கின்றனர். அது போலவே தேவர்களுடைய சேனையின் தலைவனாய் நின்று அவர்கள் அனைவரையும் காத்தருளிய ஸர்வ சக்தியுள்ள முருகக்கடவுள் சிறியோராகிய நம் பிழைகளைப்பொறுத்து நம்மையும் காத்தருள்வார். ஆதலால் அனைவரும் அவரைப் போற்றுவது அவசியம். **(30)**

(**அவதாரிகை**) குஹனுடைய பரிவாரங்களையும் அவர் இருக்கும் இடத்தையும் வணங்குகிறார்: -

**नमः केकिने शक्तये चापि तुभ्यं**
**नमश्छाग तुभ्यं नमः कुक्कुटाय ।**
**नमः सिन्धवे सिन्धुदेशाय तुभ्यं**
**पुनः स्कन्दमूर्ते नमस्ते नमोऽस्तु ॥ ३१ ॥**

**நம: கேகினே ஶக்தயே சாபி துப்⁴யம்**
**நமஶ்சா²க³ துப்⁴யம் நம: குக்குடாய ।**
**நம: ஸிந்த⁴வே ஸிந்து⁴தே³ஶாய துப்⁴யம்**
**புன: ஸ்கந்த³மூர்தே நமஸ்தே நமோ(அ)ஸ்து ॥ 31 ॥**

| | | |
|---|---|---|
| **केकिने**<br>**கேகினே** | = | கே கா என்ற இனிய குரலையுடைய மயில் வாஹனத்திற்கும், |
| **शक्तये**<br>**ஶக்தயே** | = | சக்தி என்ற ஆயுதமாகிய, |

| | | |
|---|---|---|
| तुभ्यं चापि<br>துப்⁴யம் சாபி | = | உனக்கும், |
| नमः<br>நமः | = | வணக்கம், |
| छाग<br>சா²க³ | = | ஒரு சமயம் வாஹனமாக இருந்த ஆடே, |
| तुभ्यं<br>துப்⁴யம் | = | உனக்கும், |
| नमः<br>நமः | = | வணக்கம், |
| कुक्कुटाय<br>குக்குடாய | = | கொடியாக விளங்கும் கோழிக்கும், |
| नमः<br>நமः | = | வணக்கம், |
| सिन्धवे<br>ஸிந்த⁴வே | = | சமுத்திரத்திற்கும், |
| सिन्धुदेशाय<br>ஸிந்து⁴தே³ஶாய | = | சமுத்திரக்கரையில் உள்ள தேசத்திற்கும், |
| नमः<br>நமः | = | வணக்கம், |
| स्कन्दमूर्ते<br>ஸ்கந்த³மூர்தே | = | ஸ்கந்த மூர்த்தியே, |
| तुभ्यं<br>துப்⁴யம் | = | உமக்கு, |
| नमः<br>நமः | = | வணக்கம், |
| ते<br>தே | = | உனக்கு, |
| पुनः<br>புனः | = | மறுபடியும், |
| नमः<br>நமः | = | வணக்கம், |
| अस्तु<br>அஸ்து | = | இருக்கட்டும். |

முருகனுடைய ஸம்பந்தத்தால் அனைத்தும் போற்றப்படுகின்றன. இனிய கேகா என்ற குரலுடைய மயில் முருகனின் வாஹனமாதலால் அதைப்போற்றி வணங்குகின்றனர். அது போலவே அவனது ஆயுதமான சக்தியை அநேகர் பூஜிக்கின் றனர். ஒரு சமயம் அவனுக்கு வாஹனமாய் விளங்கிய ஆட்டையும், கொடியாகத் திகழ்ந்த கோழியையும் கும்பிடுகின்றனர். அவன் வசிக்கும் சமுத்திரக்கரையும் எதிரி லுள்ள ஸமுத்திரமும் புனிதமானவை. அவையனைத்தும் நம்மால் போற்றப்படுகின் றன. ஆதலால் நாமும் அக்கடவுளை அண்டினால் கைவிடப்படோம். பெருமையையும் சிறந்த வாழ்வையும் எய்துவோம் என்பது இதனால் நன்கு விளங்குகின்றது. **(31)**

**जयानन्दभूमञ्जयापारधाम-**
**ञ्जयामोघकीर्ते जयानन्तमूर्ते ।**
**जयानन्दसिन्धो जयाशेषबन्धो**
**जय त्वं सदा मुक्तिदानेशसूनो ॥ ३२ ॥**

**ஜயானந்த³பூ⁴மஞ் ஜயாபாரதா⁴மஞ்**
**ஜயாமோக⁴கீர்தே ஜயானந்தமூர்தே ।**
**ஜயானந்த³ஸிந்தோ⁴ ஜயாஶேஷப³ந்தோ⁴**
**ஜய த்வம் ஸதா³ முக்திதா³னேஶஸூனோ ॥ 32 ॥**

| | | |
|---|---|---|
| **आनन्दभूमन्** ஆனந்த³பூ⁴மன் | = | மிகுந்த ஆனந்தவடிவமே! |
| **जय** ஜயம் | = | வெற்றி பெறுவீராக, |
| **अपारधामन्** அபாரதா⁴மன் | = | அளவற்ற காந்தியுள்ளவரே, |
| **जय** ஜய | = | வெற்றிபெறுவீராக, |
| **अमोघकीर्ते** அமோக⁴கீர்தே | = | களங்கமற்ற புகழ் பெற்றவரே, |
| **जय** ஜய | = | வெற்றிபெறுவீராக, |
| **अनन्तमूर्ते** அனந்தமூர்தே | = | அழிவற்ற மூர்த்தியே, |
| **जय** ஜய | = | வெற்றிபெறுவீராக, |
| **अनन्दसिन्धो** அனந்த³ஸிந்தோ⁴ | = | ஆனந்தக் கடலே, |

| | | |
|---|---|---|
| **जय** **ஜய** | = | வெற்றிபெறுவீராக, |
| **अशेषबन्धो** **அஶேஷப³ந்தோ⁴** | = | உலகிலுள்ள அனைத்திற்கும் உற்றவரே! |
| **जय** **ஜய** | = | வெற்றிபெறுவீராக, |
| **मुक्तिदान** **முக்திதா³ன** | = | மோக்ஷத்தை தருபவரே, |
| **ईशसूनो** **ஈஶஸூனோ** | = | பரமசிவனின் புதல்வரே! |
| **त्वं** **த்வம்** | = | நீர், |
| **सदा** **ஸதா³** | = | எப்பொழுதும், |
| **जय** **ஜய** | = | வெற்றியுடன் விளங்குவீராக. |

ஆதிசங்கர பகவத்பாதர் ஸாக்ஷாத் சிவபெருமானின் அவதாரம். அதனால் தான்

**शंकरः शंकरः साक्षात्**

**ஶங்கரः ஶங்கரः ஸாக்ஷாத்**

என்று கூறப்படுகின்றது. அவர் பரமசிவனின் புத்ரனாகிய முருகக் கடவுளைப் போற்றும் பொழுது மெய்மறந்து விடுகின்றார். ஆதலால் இங்கு அவர் சிவபெருமானுடைய நிலையைப் பெற்றுத் தனது புத்ரன் என்றும் வெற்றியுடன் வாழவேண்டுமென்று வேண்டுகின்றார். தனது தனயன் சிறப்புறவேண்டுமென விரும்புவது தந்தையின் இயல்புதானே. இவ்விதமாகக் கந்தனை நாமும் போற்றுவோமாகில் அவரும் நம்முன் தோன்றி நமக்கு ஆனந்த வெள்ளத்தை அள்ளி அளித்துக் காத்தருள்வார். **(32)**

**भुजङ्गाख्यवृत्तेन क्लृप्तं स्तवं यः**
**पठेद्भक्तियुक्तो गुहं संप्रणम्य ।**
**स पुत्रान्कलत्रं धनं दीर्घमायु-**
**र्लभेत्स्कन्दसायुज्यमन्ते नरः सः ॥ ३३ ॥**

**பு⁴ஜங்கா³க்²ய வ்ருத்தேன க்லுப்தம் ஸ்தவம் யঃ**
**படே²த்³ப⁴க்தி யுக்தோ கு³ஹம் ஸம்ப்ரணம்ய ।**
**ஸ புத்ரான் கலத்ரம் த⁴னம் தீ³ர்க⁴மாயு-**
**ர்லபே⁴த் ஸ்கந்த³ ஸாயுஜ்யமந்தே நரঃ ஸঃ ॥ 33 ॥**

**यः** = எவனொருவன்,
**யঃ**

**भुजङ्गाख्यवृत्तेन** = புஜங்கம் என்ற பெயர்கொண்ட விருத்தத்தினால்
**பு⁴ஜங்கா³க்²ய வ்ருத்தேன**

**क्लृप्तं** = அமைக்கப்பட்ட,
**க்லுப்தம்**

**स्तवं** = துதியை,
**ஸ்தவம்**

**भक्तियुक्तः** = பக்தியுடன் கூடியவனாக,
**ப⁴க்தியுக்தঃ**

**गुहं** = குஹனை
**கு³ஹம்**

**संप्रणम्य** = நன்கு வணங்கி,
**ஸம்ப்ரணம்ய**

**पठेत्** = படிப்பானோ,
**படே²த்**

**सः** = அவன்,
**ஸঃ**

**पुत्रान्** = பிள்ளைகளையும்,
**புத்ரான்**

**कलत्रं** = நல்ல மனைவியையும்,
**கலத்ரம்**

**धनं** = செல்வத்தையும்,
**த⁴னம்**

**दीर्घ आयुः** = நீண்ட ஆயுளையும்,
**தீ³ர்க⁴ ஆயுঃ**

**लभेत्** = அடைவான்,
**லபே⁴த்**

**सः नरः** = அந்த மனிதன்,
**ஸঃ நரঃ**

**अन्ते** = முடிவில்,

**அந்தே**

**स्कन्दसायुज्यं** = முருகக்கடவுளிடம் ஒன்றுபடும் நிலையையும்,

**ஸ்கந்த³ஸாயுஜ்யம்**

**लभेत्** = எய்துவான்.

**லபே⁴த்**

இத்துதிப்பாடல் பலச்ருதியுடன் முடிவுபெறுகின்றது. மிகுந்த பக்தியுடன் முருகனை வணங்கி இதைப் படிப்பவர்களின் எல்லா அபீஷ்டங்களும் இனிது நிறைவேறும். பிள்ளைகள் இல்லாதவர் பிள்ளைகளைப் பெறுவர். மனைவியை விரும்புகிறவர் நல்ல இல்லாளை எய்துவர். செல்வத்தை வேண்டுகின்றவர் அளவற்ற செல்வத்தை அடை வார்கள். முருகனின் பக்தர்களனைவரும் நீண்ட ஆயுளை அடைந்து இன்பமாய் வாழ்ந்து கடைசியாகக் கடவுளிடம் ஒன்றுபடுவர். இதுவே அனைவரும் விரும்பத்தகும் இன்பநிலை. **(33)**

## ஶ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்கம் முற்றும்.

---

